| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | றுபு ஸம்ஹிதா |
| நூலின் ஆசிரியர் | : | சே.சுரேஷ் சர்மா |
| நூலின் மொழி | : | தேவநாகரி, தமிழ் |
| நூலின் சமயம் | : | வைதீகம் - வேதம் |
| நூலின் கடவுள் | : | ருபுதேவன் |
| நூலின் ஆய்வுகள் | : | வேதம், சில்பம், கல்பம் |
| நூலின் பயன்கள் | : | வேதத்தில் ருபுக்கள் வரலாறு<br>இதிஹாஸபுராண வரலாறு<br>ருபுக்களின் படைப்புகள்<br>ஸ்தாபத்யவேதப்படி<br>தேவதா பிரதிஷ்டா விதிகள் |
| எழுத்தின் அளவு | : | 14 புள்ளிகள் |
| தாளின் அளவு | : | ஏ4 |
| பதிப்பு | : | 16.2.2016 முதற்பதிப்பு |
| நாகரி தட்டச்சு | : | சே.சுரேஷ் சர்மா |
| தமிழ் தட்டச்சு | : | சே.சுரேஷ் சர்மா |
| ஓவியங்கள் | : | சே.சுரேஷ் சர்மா |
| மொத்த படங்கள் | : | 12 |
| மொத்தபக்கங்கள் | : | 140 |
| கிடைக்ககூடிய இடம் | : | சே.சுரேஷ் சர்மா,<br>12- குப்புதாசன் தெரு,<br>இராசிபுரம் - 637408,<br>நாமக்கல் - மாவட்டம்,<br>தமிழ்நாடு. |

Estd: 2007. Phone : 040- 27408792, Cell : 9949486529.

**AKHILA BHARATIYA VISHWAKARMA BRAHMANA GNANAPEETHAM**

Central Office : E-129, Okhla Industrial Area, Phase-III, NEW DELHI.
Regional Office : 402, Avanti Mansions, B-64, D.D.Colony, Hyderabad - 500 007.

Mahamahopadhyaya, Rashtrapathi Sanmanavibhushitha

***Dr. Pedapati Nageswara Rao***

M.A.,Ph.D.,

**KULAPATHI**

Date : 20. 11. 2015.

Certificate of appreciation

Ribhus are our ancestors and they systematised Vedic Sacrificial procedures with their Skill and penance. All Gods praised their intelligence and bestowed many virtues and gifts on them. As such they got prominance in Vedic tradition and even today they are invited in every Vedic Sacrifice and offered Somajuice. But in today's India, Hindus know very little about Vedic tradition and Ribhus. As such it is takersup for research.

Mr Suresh Sharma of Rasipuram in Namakkal Dist in Tamil Nadu has laboured hard and brought out the RIBHUSAMHITA – full of information on Ribhus from all branches of Veda - Purana - Itihasa and allied works.

I Congratulate Mr Sharma on his monumental work on our tradition useful to educate people on this aspect of Vedic lore. His erudition and scholarship are worth to be recognised by all and I pray God to Shower his blessings to do more research in Vedic lore and bringout many more good works in future

With blessings,

Nageswararao

**ஓம்**

**ஓம் விஸ்வகர்மணே நம: ஓம் த்வஷ்ட்ராய நம: ஓம் ருபுதேவாய நம:**

## ருபு ஸம்ஹிதாவிலுள்ள விஷயங்கள்:

| அத்யாயம் | அனுவாகம் | விஷயங்கள் |
|---|---|---|
| 1- 3 | 1-11 | **றுக்வேத** றுபு ஸூக்தங்கள் |
| 3 | 12-13 | ஸவந தேவதா ஸூக்தம் |
| 3 | 14 | ஸவன பவமாந ஸூக்தம் |
| 3 | 15 | ஆர்பவ பவமாந ஸூக்தம் |
| 4 | 16 | றுபு பிரைஷா |
| 4 | 17 | ஸூனு ஸூக்தம் |
| 4 | 18-20 | றுபு பிராமணங்கள் |
| | | |
| 5 | 21 | **யஜுர்வேத** றுபு ஸூக்தம் |
| 5 | 22 | ருது ஸூக்தம் |
| 5 | 23 | ஸவந தேவதா ஸூக்தம் |
| 5 | 24 | ஸவந பவமாந ஸூக்தம் |
| 5 | 25 | அன்ன ஸூக்தம் |
| 6 | 26-30 | றுபு பிராமணங்கள் |
| | | |
| 7 | 31 | **ஸாமவேத** றுபு ஸூக்தம் |
| 7 | 32 | ஸவந பவமாந ஸூக்தம் |
| 7 | 33-34 | றுபு ஸாமகானம் |
| 7 | 35 | ஆர்பவ பவமானங்கள் |
| 8 | 36-40 | றுபு பிராமணங்கள் |
| | | |
| 9 | 41 | **அதர்வவேத** றுபு ஸூக்தம் |
| 9 | 42 | ஸவந தேவதா ஸூக்தம் |
| 9 | 43 | ஸவந பவமாந ஸூக்தம் |
| 9 | 44 | ரோஹிணீ ஸூக்தம் |
| 9 | 45 | மது வித்யா ஸூக்தம் |
| 10 | 46-47 | றுபு பிராமணங்கள் |
| 10 | 48-49 | றுபு ஹோமங்கள் |
| 10 | 50 | ரதகார பிராமணம் |

## ஆசிரியர் உரை:

அனைவர்களுக்கும் என்னுடைய நமஸ்கரங்கள். நமது நாட்டின் பாரம்பரியத்தினை பார்க்கும் போது பாரததேசத்தின் முதல் நூலான ரிக்வேதத்திலிருந்து நமது கலை கலாச்சாரம் மற்றும் சமூகங்களின் வழிதோன்றல் முதலியவற்றை காணமுடிகிறது. இவற்றிலிருந்து நம் முன்னோர்களின் வழிதோன்றல் அவர்களின் வழிபாட்டு விதிமுறைகள், விஞ்ஞான மதிநுட்பம், மருத்துவம் மற்றும் இசை துறையின் வளர்ச்சிகள், போர்கலை, அரசியல் திறமைகள் மற்றும் நகர, கிராம மற்றும் ஆரண்யக நாகரீக வளர்ச்சிகளைக் காணமுடிகிறது. இப்படிப்பட்ட வேதத்தில் பிரம்மவித்யா எனப்படும் சிருஷ்டியை அறிந்த ரிஷிகள் பலபேர்கள் இருந்தார்கள், இவர்களை வேதத்தின் மூல பரம்பொருளான விஸ்வகர்மாவின் அம்சமாக விளங்கினார்கள் என்று வேதத்திலுள்ள ஸம்ஹிதைகள், பிராமணங்கள், ஆரண்யகங்கள், உபநிஷத்துகள், கிலகாண்டங்கள், பரிசிஷ்டங்கள் மற்றும் வேதகல்பங்கள் கூறுகின்றது. அப்படிப்பட்டவர்களை ப்ரஜாபதி என்று வேதங்கள் அழைக்கின்றது. அப்படிப்பட்ட சிருஷ்டியை மனிதர்களாக பிறந்திருந்த ஆர்பவர்கள் தங்களுடைய அபார ப்ரஹ்ம ஞானத்தினால் தபோ வலிமையினால் பல சிருஷ்டிகளை தேவர்களுக்கு படைத்தளித்தார்கள். இதனால் இவர்கள் தேவர்களிடம் அமிர்தத்தினை உண்டு தேவத்தன்மையை அடைந்தார்கள். இப்படிப்பட்ட இவர்கள் மஹாபுருஷனும் மஹாச்சாரியரும் மஹாவிரத்தின் அதிபதியும் மஹாத்மாவாகிய ஸ்ரீ விஸ்வகர்மாவினால் உண்டான மஹா குலத்திலுத்தவர்கள் என்று வேதம் உரைக்கின்றது. இப்புத்தகத்தில் ஸ்ரீ விஸ்வகர்மா, மனு, த்வஷ்டா, சில்பகாஸ்யபர், ருபுக்கள், ஆங்கிரஸர், பிருகு மற்றும் தக்ஷா முதலிய வேதத்தில் சொல்லப்பட்ட சிருஷ்டிகர்த்தாகளில் ருபுதேவர்களை பற்றிய வேத ஸூக்தங்கள், மந்திரங்கள், பிராமணங்கள் மற்றும் கல்ப நிரூபணங்கள் ஆகியவைகள் நான்கு வேதத்திலிருந்தும் கொடுக்கப்பட்டுள்ளது.

ருபுதேவனை ஆலயத்தில் பிரதிஷ்டை செய்ய தேவையான பிரயோக விதிகளையும், அதற்கான மந்திரங்களையும் சில்பவேதத்திலிருந்தும் சதுர்வேதத்திலிருந்தும் ஆதாரத்தினையும் இங்கு தொகுத்துக் கொடுத்துள்ளேன். வேதத்தில் சொல்லப்பட்ட தேவர்களுக்குகான ரூபங்கள், பிரதிஷ்டைகள் மற்றும் பூஜாவிதானங்கள் பற்றிய விதிமுறைகள் சொல்லப்பட்ட கிரந்தங்களை **"ஸம்ஹிதா"** என்று முனிவர்கள் அழைப்பார்கள். எனவே தான் ருபுதேவனை பற்றிய வேதமந்திரங்கள், பிரதிஷ்டை மற்றும் பூஜைகளைப் பற்றிய இந்நூலுக்கு **"ருபு ஸம்ஹிதா"** என்று பெயர் வைத்துள்ளேன். இவற்றிலுள்ள வேத ஆதாரங்கள் அனைத்தும் வேதகாலத்திலிருந்த ரிஷிகளால் ஓதி உணரப்பட்டு வருவதே அன்றி இக்காலத்தில் சொல்லப்பட்டவைகளோ எழுதப்பட்டவைகளோ அன்று. ஸ்தாபத்திய வேதத்திலுள்ள 32 சாஸ்திரங்களில் ஒன்றான மானஸார ரிஷியால் சொல்லப்பட்ட மானஸாரசில்பத்தின் பிரிவிலிருந்து தேவதா பிரதிஷ்டா பிரயோகங்கள் முதன்மையாக பிரதிஷ்டா லக்ஷணங்களுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. வேதமந்திரங்கள் யாவும் சாங்காயந ரிஷியின் ருக்வேதப்பிரிவுகளில் இருந்து எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. கலியுகத்தில் ஸ்ரீ விஸ்வகர்மாக்களின் குருவாக கார்க்கேய ரிஷியால் கார்க்கேயாகமத்தில் சொல்லப்பட்ட போதாயன ரிஷியின் சில வைதீகப் பிரயோகங்களும் சேர்த்து இந்த ஸம்ஹிதையில் சொல்லப்பட்டுள்ளது. ஸ்ரீ ருபுதேவன் - ஸ்ரீ மேதா தேவியின் விக்ரஹத்தினை ஹஸ்த நக்ஷத்திரத்தில் சுபயோக சுபதினத்தில் தனியாக ஆலயம் அமைத்தோ அல்லது பிரகாரங்களில் மேற்கு முகமாகப் பிரதிஷ்டை செய்து வழிபடுவது அனைவர்களுக்கும் ஞானத்தினையும், செல்வவளத்தினையும், ஆயுஷ் ஆரோக்கியத்தினையும், நல்ல

சகோதரத்துவத்தினையும், பெற்றோர்களின் மீதான பிரியமும், அரசாங்கத்தின் அரவணைப்பும் அனைவர்களுக்கும் தரும். இவ்வழிப்பாட்டினால் அனைத்து ஸமூகமக்களும் தேவனுக்குண்டான தெய்வீகமான ஞானத்தினை அடைந்தும் தேவலோகப் பதவியை கட்டாயம் அடைவார்கள் என்பது ஐயமில்லை. இதனால் தான் வேதத்தில் வரும் மஹரிஷிகள் அனைவரும் விஞ்ஞான அறிவின் ஆற்றலின் ரூபமான இவரை வேதத்தில் வழிப்பட்டு பயனடைந்துள்ளார்கள் என்பதற்கு வேதமே ஸர்வசாக்ஷியாக நாம் அனைவர்களுக்கும் உள்ளது. ருபுதேவனின் பேராற்றலையும் அவருடைய தெய்வீகமான அனுகிரஹத்தினையும் வேதகால வழிப்பாட்டின் தொன்மையையும் பாரம்பரியத்தினையும் ஏனையோர்களுக்கு இந்நூல் பறைசாற்றும் என்பது உண்மை ஆகும். வளர்க ருபுதேவ வழிபாடு, வாழ்க வேதநெறி, பெறுங்கள் ருபுதேவனின் அனுகிரஹத்தினை அனைத்து ஸமய ஸமூக குலமக்கள்கள் அனைவரும். ருபுதேவனின் பெருமைகளை நாம் அனைவரும் தெரிந்துக்கொள்வதற்கு முன்னார் முழுமுதற்கடவுளாக வேதத்தில் தேவர்களாலும் தேவரிஷிகளாலும் சொல்லப்பட்ட ஸ்ரீ விஸ்வகர்மா ஸூக்தத்தினை முதலில் பாராணம் செய்வோம். ஸ்ரீ விஸ்வகர்ம ஸூக்தத்தினை சுருக்கி சிறிய ஸூக்தமாக முக்கியமான மந்திரங்களைக் கொண்டு ஓதியவர் ஆஸ்வலாய ரிஷி ஆவார். இவரே தேவத்வஷ்டாவின் ஸூக்தத்தினையும் தொகுத்தவர் ஆவார். இந்த ஸூக்தங்கள் ஸோமயாகத்தில் பசுபதிகளைப் பற்றி பெருமையாக ஸவனத்தில் கூறுமிடத்தில் ருக்வேதத்தின் கல்பத்தில் வருகின்றது. அடுத்து அஸ்விநிதேவர்கள், இந்திரன், விஸ்வதேவன் மற்றும் ஸரஸ்வதீ ஆகியோர்களின் பெருமைகளை கூறும் ஸூக்தம் 1:3 ல் ஸம்ஹிதாவில் வருகின்றது. இம்மூன்று ஸூக்தங்களை முதலில் ஓதிய பிறகே இந்நூலிலுள்ள ஏனைய விஷயபாகங்களை படிப்பது மிகச்சிறந்து ஆகும். இதுவே நாம் அனைவருக்கும் நற்பலன்களை நன்றாக அடைய கிடைக்கச் செய்யும் முதற்படி ஆகும்.

**॥ ऋषिः विश्वकर्मा आश्वलायन वा छन्दः त्रिष्टुप् देवता विश्वकर्मा ॥**

विश्वकर्मन् हविषा वावृधानः स्वयं यजस्व पृथिवीमुत द्याम् । मुहयन्त्वन्ये अभितो जनास इहास्माकं मघावा सूरिरस्तु ॥ १ ॥ वाचस्पतिं विश्वकर्माणमूतये मनोजुवं वाजे अद्या हुवेम । स नो विश्वानि हवनानि जोषद् विश्वशम्भूरवसे साधुकर्मा ॥ २ ॥ विश्वकर्मा विमना आद्विहाया धाता विधाता परमोत सन्दृक् । तेषामिष्टानि समिषा मदन्ति यत्रा सप्त ऋषीन्पर एकमाहुः ॥ ३ ॥ किꣳ स्विदासीदधिष्ठानमारम्भणं कतमत् स्वित् कथासीत् । यतो भूमिं जनयन् विश्वकर्मा वि द्यामौर्णोन् महिना विश्वचक्षाः ॥ ४ ॥ यो नः पिता जनिता यो विधाता धामानि वेद भुवनानि विश्वा । यो देवानां नामधा एक एव तꣳ सं प्रश्नं भुवना यन्त्यन्या ॥ ५॥ या ते धामानि परमाणि यावमा या मध्यमा विश्वकर्मन्नुतेमा । शिक्षा सखिभ्यो हविषि स्वधावः स्वयं यजस्व तनुवं वृधानः ॥ ६ ॥ विराट्पुरुषाय विद्महे- । विश्वकर्मणय धीमहि । तन्नो परब्रह्मः प्रचोदयात् ॥ ७ ॥

**ருஷி: விஶ்வகர்மா ஆஶ்வலாயநர் வா சந்த: த்ரிஷ்டுப் தேவதா விஶ்வகர்மா**

விஶ்வகர்மந் ஹவிஷா வாவ்ருதா4ந: ஸ்வயம் யஜஸ்வ ப்ருதி2வீமுத த்3யாம் । முஹ்யந்த்வந்யே அபி4தோ ஜநாஸ இஹாஸ்மாகம் மக4வா ஸூரிரஸ்து ॥ (1)

வாசஸ்பதிம் விஶ்வகர்மாணமூதயே மநோயுஜம் வாஜே அத்3யா ஹுவேம । ஸ நோ விஶ்வாநி ஹவநாநி ஜோஷத் விஶ்வஶம்பூ4ரவஸே ஸாது4கர்மா ॥ (2) விஶ்வகர்மா விமநா யத்3விஹாயா த4ாதா வித4ாதா பரமோத ஸந்த்3ருக் । தேஷாமிஷ்டாநி ஸமிஷா மத3ந்தி யத்ரா ஸப்தர்ஷீந்பர ஏகமாஹு: ॥ (3) கிஂ ஸ்விதாஸீததி4ஷ்டா2நமாரம்பணம் கதமத்2 ஸ்வித் கத2ாஸீத் । யதோ பூ4மிம் ஜநயந் விஶ்வகர்மா வித்யோமௌர்ணோந் மஹிநா விஶ்வசக்ஷா: ॥ (4) யோ ந: பிதா ஜநிதா யோ வித4ாதா தா4மாநி வேத3 பு4வநாநி விஶ்வா । யோ தே3வாநாம் நாமத4ா ஏக ஏவ தஂ ஸம் ப்ரஶ்நம் புவநம் யந்த்யந்யா ॥ (5) யா தே தா4மாநி பரமாணி யாZவமா யா மத்4யமா விஶ்வகர்மந்நுதேமா । ஶிக்ஷா ஸகி2ப்4யோ ஹவிஷி ஸ்வதா4வ: ஸ்வயம் யஜஸ்வ தநுவம் வ்றுதாந: ॥ (6) விராட்புருஷாய வித்மஹே விஶ்வகர்மணாய தீமஹீ । தந்நோ பரப்ரஹ்ம: ப்ரசோதயாத் ॥ (7)

**॥ ऋषिः आश्वलायनः वसिष्ठः छन्दः त्रिष्टुप् देवता देवत्वष्टा ॥**

य इमे द्यावापृथिवी जनित्री रूपैरपिं शद्भुवनानि विश्वा। तमद्य होतरिषितो यजीयान् **देवंत्वष्टार**मिह यक्षि विद्वान्॥ १॥ तन्नस्तुरीपमध पोषयित्नु **देवत्वष्टर्वि** रराणाः स्यस्वः। यतो वीरः कर्मण्यः सुदक्षो युक्तग्रावा जायते देवकामः॥ २॥ **देवत्वष्टा** सविता विश्वरू पः पुपोष प्रजाः पुरुधा जजान। इमा च विश्वा भुवनानयस्य महद्देवा नामसुरत्वमेकं ॥ ३॥ **देवत्वष्टर्यद्ध** चारुत्वमानड्यदङ्गिरसामभवः सचा भूः। स देवानां पाथ उप प्र विद्वानुशन् यक्षि द्रविणोदः सुरत्नः॥ ४॥ पिशङ्गरूपः सुभरो वयोधाः श्रुष्टी वीरो जायते देवकामः। प्रजां **त्वष्टा** वि ष्यतु नाभिमस्मे अथा **देवाना**मप्ये तु पाथः॥ ५॥ प्रथमभाजं यशसं वयोधां सुपाणिं **देवं** सुगभस्तिमृभ्वं । होता यक्षद्यजतं पस्त्यानां अग्निस्**त्वष्टारं** सुहवं विभावा॥ ६॥

**றுஷி: ஆஶ்வலாயந: வஸிஷ்ட: சந்த: த்ரிஷ்டுப் தேவதா தேவத்வஷ்டா**

ய இமா த்யாவாப்றுதிவீ ஜநித்ரீ ரூபைரபிம் ஶத்புவநாநி விஶ்வா, தமத்ய ஹோதரிஷிதோ யஜீயாந் **தேவம் த்வஷ்டா**ரமிஹ யக்ஷிவித்வாந் (1) தந்நஸ்துரீபமத போஷயித்நு **தேவத்வஷ்டர்** வி ரராணா: ஸ்யஸ்வ:, யதொ வீர: கர்மண்ய: ஸுதக்ஷோ யுக்த்தக்ராவா ஜாயதே தேவகாம: (2) **தேவத்வஷ்டா** ஸவிதா விஶ்வரூப: புபோஷ ப்ரஜா: புருதா ஜஜாந, இமா ச விஶ்வா புவநாநயஸ்ய மஹத்தேவா நாமஸுரத்வமேகம் (3) **தேவத்வஷ்டர்** யத்த சாருத்வமாட்யதங்கிரஸாமபவ: ஸசாபூ:, ஸ தேவாநாம் பாத உப ப்ர வித்வாநுஶந் யக்ஷி த்ரவிணோத: ஸுரத்ந: (4) பிஶங்கரூப: ஸுபரோ வயோதா: ஶ்ரஷ்டி வீரோ ஜாயதே தேவகாம:, ப்ரஜாம் **த்வஷ்டா** விஷ்யது நாபிமஸ்மே அதா **தேவாநாமப்**யே து பாத: (5) ப்ரதமபாஜம்

யஶஸம் வயோதாம் ஸுபாணிம் **தேவம்** ஸுகபஸ்திம் ருப்வம், ஹோதா யக்ஷத் யஜதம் அக்நிஸ் **த்வஷ்டாரம்** ஸுஹவம் விபாவா (6)

**॥ ऋषिः मधुच्छन्दः छन्दः गायत्रीः देवता अश्विनौ इन्दूं विश्वदेवं सरस्वतीं च ॥**

अश्विना यज्वरीरिषो द्रवत्पाणी शुभस्पती । पुरुभुजा चनस्यतम् ॥ १ ॥ अश्विना पुरुदंससा नरा शवीर या धिया । धिष्ण्या वनतं गिरः ॥ २ ॥ दस्रा युवाकवः सुता नासत्या वृक्तबर्हिषः । आ यातं रुद्रवर्तनी ॥ ३ ॥ इन्द्रा याहि चित्रभानो सुता इमे त्वायवः । अण्वीभिस्तना पूतासः ॥ ४ ॥ इन्द्रा याहि धियेषितो विप्रजूतः सुतावतः । उप ब्रह्माणि वाघतः ॥ ५ ॥ इन्द्रा याहि तूतुजान उप ब्रह्माणि हरिवः । सुते दधिष्व नश्चनः ॥ ६ ॥ ओमासश्चर्षणीधृतो विश्वे देवास आ गत । दाश्वांसो दाशुषः सुतम् ॥ ७ ॥ विश्वे देवासो अप्तुरः सुतमा गन्त तूर्णयः । उस्रा इव स्वसराणि ॥ ८ ॥ विश्वे देवासो अस्रिध एहिमायासो अद्रुहः । मेधं जुषन्त वह्नयः ॥ ९ ॥ पावका नः सरस्वती वाजेभिर्वाजिनीवती । यज्ञं वष्टु धियावसुः ॥ १० ॥ चोदयित्री सूनृतानां चेतन्ती सुमतीनाम् । यज्ञं दधे सरस्वती ॥ ११ ॥ महो अर्णः सरस्वती प्र चेतयति केतुना । धियो विश्वा वि राजति ॥ १२ ॥

**ருஷி: மதுச்சந்த: வைஶ்வமித்ர: சந்த: காயத்ரீ:**
**தேவதா அஶ்விநௌ இந்த்ரம் விஶ்வதேவம் ஸரஸ்வதீம் ச**

அஶ்விநா யஜ்வரீரிஷோ த்ரவத்பாணீ ஶுபஸ்பதீ, புருபுஜா சநஸ்யதம் (1) அஶ்விநா புருதம்ஸஸா நரா ஶவீர யா தியா திஷ்ண்யா வநதம் கிர: (2) தஸ்ரா யுவாகவ: ஸுதா நாஸத்யா வ்றுக்த்தபர்ஹிஷ:, ஆ யாதம் ருத்ரவர்தநீ (3) இந்த்ரா யாஹி சித்ரபாநோ ஸுதா இமே த்வாயவ:, அண்வீபிஸ்தநா பூதாஸ: (4) இந்த்ரா யாஹி தியோஷிதோ விப்ரபூத: ஸுதாவத:, உத ப்ரஹ்மணி வாதத: (5) இந்த்ரா யாஹி தூதுஜாந உப ப்ரஹ்மாணி ஹரிவ:, ஸுதே ததிஷ்வ நஶ்சந: (6) ஓமாஸஶ்சர்ஷணீத்றுதோ விஶ்வே தேவாஸ ஆ கத, தாஶ்வாம்ஸோ தாஶுஷ: ஸுதம் (7) விஶ்வே தேவாஸோ அப்துர: ஸுதமா கந்த தூர்ணய:, உஸ்ரா இவ ஸ்வஸராணி (8) விஶ்வே தேவாஸோ அஸ்ரித ஏஹிமாயாஸோ அத்ருஹ:, மேதம் ஜஷந்தம் வஹ்நய: (9) பாவகா ந: ஸரஸ்வதீ வாஜேபிர் வாஜிநீவதீ, யஜ்ஞம் வஷ்டுதியாவஸு: (10) சோதயித்ரீ ஸூந்றுதாநாம் சேதந்தீ ஸுமதீநாம், யஜ்ஞம் ததே ஸரஸ்வதீ (11) மஹோ அர்ண: ஸரஸ்வதீ ப்ர சேதயதி கேதுநா, தீயோ விஶ்வா வி ராஜதி (12)

**வேதங்களில் ருபுதேவர்களின் பெருமைகள்:**

தேவர்களாகிய ருபுக்கள் என்ற கடவுள்கள் சிருஷ்டிகளுக்கும், விஞ்ஞானத்திற்கும், ஆயகலைகள் 64 க்கும் அதிதேவர்களாக வேதத்தில் கூறப்பட்டுள்ளார்கள். இவர்கள் வேதங்களாகிய ருக், யஜுர், ஸாமம், பிருகுவாங்கீரஸம் முதலியவற்றின் பரபிரம்ம தத்துவத்தை எடுத்துரைக்க வேதத்தில் முதன்முதலில் தோன்றிய **"மது-வித்தை"**யை ஜகத்குருவாகிய **"ஸ்ரீ த்வஷ்ட-ப்ரஜாபதி"**யிடம் கற்றுக்கொண்டார்கள். இவ்வித்யை இவர்கள் அறிந்ததால் ஸோமயாகத்தில் மூன்றவது ஸவனத்தின் அதிதேவர்களாக ஆகினார்கள். இவர்கள் வேதங்களிலும், உபவேதங்களிலும் சிறந்தப் பேரறிவினைப் பெற்றிருந்தார்கள்.

**1) ஆயுர்வேதம்:** ஆயுர்வேதத்தில் பிரதானமாக விளங்கும் ஓஷதிகளையும், வனஸ்பதிகளையும், மருத்துவப் பயிர்களையும், உணவுப் பயிர்களையும் வேளாண்மையைச் செய்ய **"கிருஷி-வித்தை"**யாவை தங்களுடைய தபோ வலிமையின் மூலமாக சிருஷ்டித்தார்கள். இவ்வித்யாவின் மூலமாக தேவர்களுக்கு தம்முடைய முன்னோர்களுக்கும், தேவர்களுக்கும் **"வனஸ்பதி-வித்யா"**வின் மூலமாக தேவ வைத்தியத்தினை ருபுதேவர்கள் செய்தார்கள். மேலும் பசுவின் திசுவினை எடுத்து அதன் மூலமாக அதிகபால் தரும் பசுக்களை **"ஜீவசிருஷ்டி-வித்யா"** மூலமாக படைத்து தேவபுரோஹிதருக்கு அன்பளிப்பு செய்தார்கள். அதிமான தீரமான ஆற்றலுடைய உயரின குதிரைகளை தங்களுடைய தபபோ ஞானத்தினால் படைத்து இந்திரனுக்கு வாஜபேயத்தில் பரிசாக கொடுத்ததார்கள் என்று வேதம் கூறுகின்றது.

**2) தனுர்வேதம்:** இரதத்தினை போரில் எப்படி பயன்படுத்துவது ஒருசக்ரம், இரண்டுசக்ரம், மூன்றுசக்ரம், நான்குசக்ரம் உடைய இரதத்தினை போர்களில் எப்படி ஓட்டுவது என்ற **"ரதமாரோஹண-வித்யா"** வையும். குதிரைகள் மற்றும் யானைகளை எப்படி சமிகைச் செய்து அவற்றினை யஜமானன் சொற்பேச்சு கேட்க வைத்து போரிலே பயன்படுத்துவது என்ற **"அசுவ-வித்யா"** மற்றும் **"கஜ-வித்தை"**யையும், எந்தெந்த அஸ்திரங்களை எப்படியெல்லாம் போரில் பிரயேகிப்பது என்பது பற்றிய **"அஸ்திரபிரயோக-வித்தை"**களையும் உருவாக்கினார்கள். இப்படியாக வேதத்தில் பல தனுர் வித்தைகளுக்கு குருவாக ருபுதேவர்கள் வேத ஸூக்தங்கள் மூலமாக சொல்லப்படுகிறார்கள்.

**3) கந்தர்வவேதம்:** வேதத்தில் இசைநுட்பங்களில் முதன்மையான மெட்டுகள் அல்லது பண்கள் எனப்படும் சந்தங்களுடன் பாடும் **"சந்தஸு-வித்தை"**யையும், ஸாம கானத்தில் கிராமேயம் எனப்படும் வேய கானம் மற்றும் பிரகிருதி கானங்களையும், ஊஹ்ய ஸாமங்கயையும், ஸாமவேதத்தின் அதிரஹஸ்யங்களான ரஹஸ்ய கானங்களையும் ஸோம பவமானத்தில் இந்த **"கான-வித்யா"**வையும், வேதத்தினையும் ஸ்லோகங்களையும் மஹாதத்துவத்துடன் கவிபாடி தேவர்களை மயங்கச்செய்யும் **"கவி-வித்யா"**வையும் கசடறக்கற்றவர்கள் ருபுதேவர்கள்.

**4) சில்பவேதம்:** சிருஷ்டியின் ஒரு பிரிவாக விளங்கும் இவ்விஞ்ஞானத்தினை வேதத்தின்படி இரதம் செய்யும் மதிநுட்பமும், மனைகளை பஞ்ச பூதங்களின் குணமறிந்து அஷ்டதிக் தேவதைகளின் பதம், வாஸ்துதேவனின் காலமறிந்து கோட்டை, அரண்மனைகள், தேவாலயங்கள், கிருஹங்கள், அணைக்கட்டுகள், நீர்தேக்கங்கள் முதலிய சிருஷ்டிகளை **"ஸ்தாபத்ய-வித்யா", "வாஸ்து-வித்யா", "சில்ப-வித்யா", "ரதவாஹன-வித்யா", "அஸ்திர-வித்யா"** முதலிய வித்யாக்களை அறிந்து வேதத்தில் தேவர்களுக்கு சிருஷ்டித்து கொடுத்துள்ளார்கள். ஜ்யோதிஷதத்தில் கிரஹ நிலைகளை அறிந்து யஜமானுக்கு சொல்லப்பட்ட நக்ஷத்திரத்தில் ஆயாதி அறிந்து மனைகளை வகுத்தார்கள். இதனால் **"ஜ்யோதிஷ்ய-வித்தை"**யையும் ருபுதேவர்கள் அறிந்து தேவர்களுக்கு உருவாக்கி தந்துள்ளார்கள்.

**5) இதிஹாஸபுராணங்கள்:** புராணகாலத்தில் ருபுதேவர்கள் பரபிரம்ம தத்துவத்தினை உணரவைக்க **ருபு-கீதங்கள்** மூன்றினை மூன்று புராணங்கள் மூலமாக சொல்லியிருக்கின்றார்கள். மேலும் அஸுரேந்திரன் பிரஹ்லாதன் பாரதத்தில் ஸுதன்வாங்கிரஸரின் பெருமையை போற்றி **அஸுரேந்திர-கீதங்கள்** இரண்டு சொல்லியுள்ளார். மேலும் **4-உபநிஷத்துகள்** புராணகாலத்து ருபுக்களால் யஜுர், ஸாம, அதர்வத்திற்கு சொல்லப்பட்டுள்ளது. இதுமட்டுமின்றி அத்வைத தத்துவத்தினை இப்பாரதத்தில் பரப்ப முதன் முதலில் **அத்வைத-பிரம்ம-விஞ்ஞானம்** என்ற கொள்கையை உலகிற்கு முதலில் சொல்லியவர் இவரே. இவ்வித்யாவை

புராணங்களில் இரண்டு முறை சொல்லியிருக்கின்றார். மேற்சொன்ன அனைத்தினையும் தன்னுடைய ஆத்மார்த்த சிஷ்யராகிய நிதாக மஹரிஷிக்கு கூறியுள்ளார்.

**6) ருபு ஸூக்த்ததின் விளக்கங்கள்:**

ருபுக்கள் தன்னுடைய தாய்தந்தையர்களுக்கு என்றும் இளமையை அளிக்கக் கூடிய வைத்தியத்தினை தன்னுடைய தவசக்தியால் கண்டுபிடித்து, அதற்கான மூலிகைகளால் மருந்துகளை செய்யும் "ஆயுர்-வித்தை"யினை பயன்படுத்தி இதன் மூலமாக அவர்களை மூப்பு பிணியிலிருந்து நீக்கி பொலிவுடையவர்களாக்கினார்கள். ருபுக்கள் பயன்படாத நிழத்தினைச் சீர்செய்து பண்பட்ட நிலமாக்கி அதில் தேவத்தன்மையுடைய ஓஷதிகளை விளைவித்தார்கள், அதற்கு உழவுக்கருவிகளையும் மற்றும் தேவையான நீர் ஆதாரத்தினை ஸிந்து நதியிலிருந்து பெருக்குவதற்காக அணைக்கட்டுகளையும் படைத்தார்கள். மேலும் தன்னுடைய சிறந்த தபோ வலிமையின் மூலமாக நிழத்தடி நீரினை கண்டறிய "ஆபோ-வித்தை"யையும் உருவாக்கினார்கள். இவ்வாறராக மேற்கண்டுபிடித்த "க்ருஷி-வித்தை"களைப் பயன்படுத்தி வேளாண்மையை வளப்படுத்திக் காட்டினார்கள். ருபுக்கள் விஸ்வரூபமுடைய காமதேனுவையும், அதிகமான பால்தரக் கூடிய பால்பசுக்களையும் தன்னுடைய தபோ வலிமையின் மூலமாக "ஜீவஸ்ருஷ்டி-வித்தை"யின் மூலமாக உருவாக்கி தன்னுடைய பெரியப்பாவாகிய தேவகுரு பிருஹஸ்பதிக்கு வழங்கினார்கள். இதனால் பிருஹஸ்பதியும் இவருடைய மனைவியும் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். ருபுக்கள் மிகவேகமாக செல்லக்கூடிய நான்கு சக்கரங்கள் கொண்ட தேரினை விஸ்வதேவர்களுக்கும் அளித்தார்கள் மற்றும் இரண்டு மற்றும் ஒரு சக்கரங்களுடையதும் முக்கோணபீடமுடைய விசித்திரமான சிற்ப வேலைப்பாடுகளுடையதுமான தேரினை தேவ மருத்துவர்களாகிய அஸ்வினி தேவர்களுக்கும் அளித்தார்கள். இவர்களுடைய "சில்ப-வித்யா" ஸாமர்தியத்தை அறிந்த தேவர்கள் மனம் மகிழ்ந்து "விஸ்வதேவர்களுக்கு -தக்ஷர்களாக" பதவியளித்தார்கள். ருபுக்கள் உயர்இனக்குதிரைகளை தன்னுடைய வேதமந்திர சக்தியால் சிருஷ்டித்தார்கள். அக்குதிரைகளை நன்கு பழக்கிக்கொண்டு ஸமிக்கைகளாலும் தான் கூப்பிட்ட குரலுக்கு யஜமானன் இருக்கும் இடத்தினை ஓடிவந்து அடையும் திறமைவாய்ந்த இரு கபிலநிறக் குதிரைகளை "அஸ்வ-வித்தை"யை பயன்படுத்தி வளர்த்து தேவர்களின் தலைவனான இந்திரனுக்கு பரிசாக அளித்தார்கள். இதனால் இவர்கள் தேவேந்திரனுடைய ஸபையில் இந்திரனுடைய நண்பர்களாக அமர்ந்து அறிவியல் மற்றும் விஞ்ஞான ரீதியான ஆலோசனைகளை தேவர்களுக்கு சொல்லும் வாய்ப்பினையும், இவர்களுடைய தபோ வலிமையால் தேவர்களுடன் சேர்ந்து அமிருதம் பருகும் தகுதியையும் அடைந்தார்கள். ருபுக்கள் வேதத்தில் பசுமை புரட்சி செய்தமையால் ஸூரியனின் கதிர்கள் கடுமையான வீச்சிலிருந்து மிகவும் மென்மையானது. இதனால் ஆதித்யன் தேவர்களாலும் மற்றும் ரிஷிகளினாலும் போற்றும் உருவமைப்பினைப் பெற்றார். இவர்களுடைய அறிவின் பிரகாசத்தினால் பரமாதித்யனின் எட்டு ஸ்வரூபத்தில் ருபுகளும் ஒரு அம்ஸமுடைய ஆதித்தியர்களாக விளங்கும் பதவியை பெற்றார்கள். இதன் மூலமாக ஸம்வத்ஸரம் என்று சொல்லக் கூடிய 12 மாதங்களைக் கொண்ட ஒரு வருடமானது முழுமையான செழிப்புடையக் காலமாகியது. ஆகையால் ஸம்வத்ஸரத்தின் அதிதேவர்களாக ஆனார்கள்.

ருபுக்கள் தங்களுடைய மதிநுட்பத்தினால் தங்கத்தினை தூய்மை செய்யும் முறையையும் அதில் அணிகள் செய்யும் அறிவினையும் பெற்றிருந்தமையால் வருணதேவனுக்கு "ரத்தின-வித்தை" கண்டுபிடித்து பொன்னாலான கவசத்தினையும் இரத்தினங்களால் செய்யப்பட்ட ஆபரணங்களையும், விசித்திர

வேலைப்படுகளுடைய கர்ணகுண்டலங்களையும் படைத்து அளித்தார்கள். இதனால் இவர்கள் தங்களுடைய தபோ வலிமையால் தங்கம், இரும்பு, செம்பு, வெண்கலம் பேன்ற உலோகங்களை அறியும் "தாது-வித்தை"யையும் மற்றும் உலோகங்களை பிரித்தெடுக்க உதவும் வெண்கார உப்புகள் மற்றும் பாதரஸங்களைக் பற்றிய "ரஸ-வித்தை"யையும், நவகிரஹங்களுடைய குணங்களையுடையதும் இயற்கையாக பூமியில் விளையக்கூடியதுமான மாணிக்கம், வைரம் முதலிய நவரத்தினங்களை பயன்படுத்தி ஆபரணமாகவும், பாஷாணங்களாகவும் உருவாக்கி இவைகளின் ஆற்றலைப்பெற்றிட "ரத்தின-வித்தை"யையும் படைத்தளித்தார்கள். ருபுக்கள் சந்தங்களுடன் கவிபாடும் திறமையுடையவர்கள் ஆகையாலும் குற்றமற்ற ஸத்தியமான வேத மந்திரங்களை கற்றவர்கள் (ருஷி: மேதாதி: காண்வ: ஆங்கிரஸ: 1-வது மண்டலம், 20-வது ஸூக்தத்தில் ஆதாரம்) என்பதாலும் ஸோம மஹா யாகத்தின் மூன்றாவது ஸவனத்தில் புரோஹிதம் செய்யும் சிறப்புப் பெற்றார்கள். இவர்களின் பரிசுத்தமான மந்திர ஒலிகளைக் கேட்டு அக்னிதேவனே மகிழ்ச்சியடைந்தார். ஆகையால் ஸோம யாகத்தின் மூன்றாம் நாளில் நடைபெறும் அனைத்து ஸோம ஹவிர்பாகத்திற்கும் ருபுக்களே அதிதேவதைகளாக வேதத்தில் கூறிப்பிடப்பட்டுள்ளார்கள். ருபுக்கள் மிக சிறந்த முன்யோசனையுடையவர்கள், இவர்கள் மிகச்சிறந்த வேலைப்பாடுகளுடைய யாகக்கரண்டியை செய்தார்கள். யாகத்தில் ஈடுபடும் ருபுக்களில் முதலில் பிறந்த ருபுதேவனோ 2 கரண்டிகளை செய்யலாம் என்றார். விப்வாதேவன் 3 கரண்டிகளை செய்யலாம் என்றார். ஆனால் வாஜதேவனோ 4 யாகக்கரண்டியை செய்யலாம் என்றார் ஏனெனில் நாம் செய்யும் வேள்வியில் தேவர்கள் மகிழ்ந்தார்கள் எனில் வேள்வின் நாயகனாக விளங்கும் அக்னிதேவனே நம்மை வந்து ஆசீர்வாதம் செய்வார் என்ற உண்மையான வேத நம்பிக்கை பெற்றுருந்தமையால் இவர்கள் அமிருதத் தன்மையை அடைந்தார்கள். இவர்களின் பேரறிவின் ஆற்றலைக் கண்டு இவர்களின் குரு த்வஷ்ட-பிரஜாபதியே வியந்துப்போனார். இப்படியாக ஸுதன்வாங்கிரஸ ருஷியின் புதல்வர்களாகிய ருபுக்கள் மூவரும் முறையே இந்திரனுக்கு தக்ஷராக ருபுதேவனும், அஸ்வினிகளுக்கும் மற்றும் வருணனுக்கு தக்ஷராக விப்வாதேவனும், விஸ்வதேவர்களுக்கு தக்ஷராக வாஜதேவனும் பதவிவகித்துக் கொண்டுள்ளார்கள். இவர்களுடைய தந்தை ஸோமயாகத்தின் மூன்றாம் தினத்தின் அதிதேவன் ஸுதன்வாங்கிரஸர் ஆவார் இவருடைய மனைவி கேசிநீ தேவீ ஆவார். இதுவரை என்னால் தொகுத்து எழுதி ஸ்ரீ விஸ்வகர்ம பிராமண ஸமூகத்திற்காக வெளியிடப்பட்ட நூல்கள்:

1) பிரம்ம வம்ஶ பிராமண பெருமைகள் (1.10.2008 அன்று இராசிபுரத்தில் விஸ்வபிராமண ஸமூகத்தினால் நடந்தப்பட்ட ஸ்ரீ விஸ்வகர்ம குரு பூஜையில் வெளியிடப்பட்டது மொழி: தமிழ்)
2) பிரம்ம வம்ஶ பிராமண போதாயன ஸூத்திர விதி (19.9.2010 அன்று தஞ்சை பெரிய கோயிலின் 1000 மாவது ஆண்டு விழா பூர்த்தியில் ஸ்ரீ விஸ்வகர்ம சிற்பிகளைப் பற்றிய சிறப்பு சொற்பொழிவில் வெளியிடப்பட்டது. மொழி: தமிழ் மற்றும் கிரந்தம்)
3) பிரம்ம வம்ஶ பிராமண யஜுர்வேத கோஷம் (10.10.2010 அன்று ஸ்ரீ விஸ்வகர்ம பிராமணர்களின் ஜகத்குரு ஸ்ரீ சிவஞான ஷண்முகாச்சார்ய ஸ்வாமிகளின் கனகாபிஷேகத்தின் போது நெய்வேலி குமாரின் மூலமாக வெளியிடப்பட்டது. மொழி: தமிழ் மற்றும் கிரந்தம்)
4) இரதகார பிராமணர்கள் வரலாறு (18.3.2013 அன்று என்னுடைய ஸ்ரீ சாங்காயந ரிஷி ரிக்வேத பாடசாலையில் ஆரம்பகல்வி பயின்ற பாலகர்கள் மூவருக்கு ருக்வேத மார்க்கமான முறையில் உபநயனம் (பூணூல்) என்னால் செய்யப்பட்ட போது வெளியிடப்பட்டது. மொழி: தமிழ்)

5) சதுர்வேதீய விஶ்வகர்ம ஸம்ஹிதா (14.9.2013 அன்று சே.சுரேஷ்சர்மா-சூர்யா ஆகிய எங்களுடைய விவாஹத்தின் முதல்நாள் ஜகத்குரு சிவஷண்முகாச்சார்ய ஸ்வாமிகள் முன்னிலையில் வெளியிடப்பட்டது மொழி: தேவநாகரி, தமிழ்)
6) ருக்வேத விஶ்வகர்ம பாராயணம்
7) யஜுர்வேதீய விஶ்வகர்ம பஞ்ச ஸூக்தங்கள்
8) அதர்வவேதீய விஶ்வகர்ம பஞ்சகம் (3.1.2016 அன்று தமிழ்நாடு விஸ்வபிரமணர்களின் புரோஹிதர்கள் சங்கத்தின் ஆண்டுகால கலந்துரையாடலின் போது இம்மூன்றும் வெளியிடப்பட்டது. மொழி: தேவநாகரி, தமிழ்)
9) றுபு ஸம்ஹிதா (16.2.2016 அன்று என்னுடைய சகோதரனின் சே.சந்தோஷ்-மோகனலக்ஷ்மீ விவாஹத்தில் மஹாமஹோபத்தியா Dr. நாகேஸ்வர ராவ் ஆசார்யா, உபாத்யா ப.உமாபதி ஆசார்யா ஆசீர்வாதத்துடன் Dr. நரஸிம்ம சில்பாச்சார்யா அவர்களிடம் வெளியிடப்பட்டது. மொழி: தேவநாகரி, தமிழ்)
10) வேதத்தில் ஶ்ரீ விஸ்வகர்மா அவதாரங்கள் (மொழி: தேவநாகரி, தமிழ்)
11) நாராயண பலி (16.12.2015 மங்களம்பேட்டை மாணிக்கமுருகனின் இளையமகன் உத்திரகிரியையில் தரப்பட்டது மொழி: தேவநாகரி, தமிழ்)
12) வைதீகத்தில் அன்னபிராச்ன விதிகள் (மொழி: தேவநாகரி, கிரந்தம், தமிழ்)

மேற்கண்ட நூல்கள் யாவும் வேதத்திலிருந்தும் உபவேதத்திலிருந்தும் வேத அங்கத்திலிருந்தும் ஸாதாரண கிரந்தங்களாகிய இதிஹாஸ புராணங்களிலிருந்தும் என்னால் தொகுத்து வெளியிடப்பட்டவைகள் முறையே தமிழ், கிரந்தம் மற்றும் தேவநகரி மொழியில் ஆதாரங்களுடன் படிப்பதற்காக படைக்கப்பட்டவைகள் ஆகும். விஸ்வகர்ம பிராமணர்கள் என்ற மஹா குலத்தின் பாரம்பரியத்தில் ஐந்து வகையான பிரிவுகள் வேதகாலத்தில் இருந்துள்ளது. அவர்கள் பிரம்ம கணம், பிரஜாபதிகணம், ருபுகணம், பிருகுகணம் மற்றும் அங்கிரோகணம் என்று **தேவகண**ங்களாக வேதத்தில் அழைக்கப்பட்டுள்ளார்கள். இவர்கள் அனைவரும் சிருஷ்டி கார்த்தாக்களே. இப்படிப்பட்ட சிருஷ்டிகர்த்தாக்கள் வேதத்தில் அடைந்த பதவிதான் **"விஸ்வகர்மா"** என்பது ஆகும். இவர்கள் வேதத்தினை முதன்மையாக வைத்துக்கொண்டு அதன் மூலமாக உபசிருஷ்டியை செய்தற்கான ஆதாரங்கள் வேதங்களில் ஸூக்தங்களாகவும், மந்திரங்களாகவும், பிராமணங்களாகவும் உள்ளது. இவர்களுடைய கோத்திரங்களும் இவர்கள் பயின்ற வேதப்பிரிவுகளைப் பற்றியும் விளக்கத்துடன் வேதத்தில் ஆதாரம் உள்ளது. வேதகாலத்தினை அடுத்து இதிஹாஸ புராணகாலத்திலும் விஸ்வகர்ம பிராமணர்களுக்கு ஐந்து பிரம்மாக்கள் உண்டேன சொல்லப்பட்டுள்ளது. அவர்கள் முறையே மனு, மயன், த்வஷ்டா, சில்பி மற்றும் விஸ்வஜ்ஞன் என்று சொல்லப்படுகின்றார்கள். இந்த ஆதரங்கள் யாவும் சில்பவேதத்தின் 32 பிரிவுகளிலும் சொல்லப்பட்டுள்ளது ஆகும். இந்த ஸ்தாபத்யவேதத்தில் முதலில் சொல்லப்பட்ட சாஸ்திரம் விஸ்வகர்ம சில்பம் ஆகும். இச்சில்ப வேதத்தினை பயன்படுத்தி சிருஷ்டி செய்யும் இப்பிராமணர்களை பாரதத்தில் அனைவர்களாலும் மற்றுமுள்ள பல கிரந்த புஸ்தகங்களிலும் பாஞ்சால பிராமணர்கள், திமன் பிராமணர்கள், ஜாங்கிட பிராமணர்கள், விஸ்வகர்ம பிராமணர்கள், தேவ பிராமணர்கள், ரதகார பிராமணர்கள் மற்றும் ஆதிபிராமணர்கள் என்று சொல்லப்பட்டும் அழைக்கப்பட்டும் நிக்ஷியக்கப்பட்டும் உள்ளார்கள். ருக்வேதத்தில் மஹா குலத்தினார்கள் என்றும் யஜுர்வேதத்தில் பிரம்ம குலத்தினர்கள் என்றும், ஸாமவேதத்தில் ஆசார்ய குலத்தினர்கள் என்றும் அதர்வண வேதத்தில் பிருகுவாங்கிரஸர்கள் என்றும் இந்த சிருஷ்டிகார்த்தாக்கள் நிக்ஷியக்கப்படுகின்றார்கள்.

மேலும் ஆதாரமாக ருக்வேதத்தில் தீர்க்கதம ரிஷியாலும், சாங்காயந ரிஷியின் ஆரண்யகத்தில் அத்யாயம் 2ல் பிராமணம் 18லும் மற்றும் கௌஷீதகி ரிஷியின் பிராமணம் அத்யாயம் 32 லும் அக்னிஷ்டோமம் என்ற ஸோம யாகத்தில் மஹாவிரத்தின் பிரஜாபதியாக ஸ்ரீ விஸ்வகர்மா நிக்ஷியக்கப்பட்டுள்ளார் என்பதுடன் மூன்றாவது தினத்தின் யாகத்தில் ருபுதேவர்களை மஹாகுலத்தில் உண்டானவர்கள் என்று புகழும் மந்திரங்களை சொல்லி அவிர்பாகமானது மஹத்துவமுடைய பிரம்மத்தை உணரவைக்கக் கூடிய அக்னிஷ்டோமத்தில் விதி சொல்லப்பட்டுள்ளது.

अथ ऋग्वेदीय शांखायन आरण्यके अध्यायं २ ब्राह्मणं १८ ॥ कौषीतकि ब्राह्मणे महाव्रतं अध्यायं ३२ ॥ वैश्वकर्मणोऽतिग्राह्यः ॥ किं उ श्रेष्ठः किं यविष्ठो न आजगनित्यार्भवं । न निन्दिम चमसं यो **महाकुलः** इति महद्वत् । महद्वद्धेतदहः ॥ तदग्निष्टोमः संतिष्ठते । ब्रह्म वा **अग्निष्टोमः** ॥ १ ॥

மற்றும் போதாயன ரிஷியின் கல்பத்தில் சிரௌத ஸூத்திரத்தில் பிரச்னம் 18ல் கண்டம் 26ல் இதே அக்னிஷ்டோமம் என்ற ஸோமயாகத்தில் முதன்மையான விஷயங்கள் சொல்லப்பட்டுள்ளது. அதில் பாஞ்சாலர்களாகிய கந்தர்வாயண ரிஷி, வாலேய ரிஷி மற்றும் அக்னிவேச்ய ரிஷி முதலியோர்கள் மஹாகுலத்திலுண்டவர்கள் என்று சொல்கின்றார். अथ बोधायन कल्पे श्रौत सूत्रं प्रश्नं १८ खण्डं २६ ॥ स एष ज्येष्ठानां **अग्निष्टोमः** । ततो ह वा एतत् पाञ्चालेषु गन्धर्वायिणा वालेया आग्निवेश्याः पापायिता इव **महाकुलं** ह तत् पुरा बभूव ॥ மேற்சொன்ன வேத பிராமண ஆரண்யக மற்றும் கல்ப நிரூபணங்களிலிருந்து சிருஷ்டிகர்த்தாக்களை மஹாகுலத்தினர்கள் என்று அழைக்கப்பட்டார்கள் என்பதற்கான ஆதாரங்கள் ஆகும். மேலும் ஸோமயாக பிரியர்களாகிய இவர்கள் முன்குடும்மி வைத்துக்கொள்ளும் பழக்கமுடையவர்கள் ஆவார்கள் என்று கல்பங்களில் சொல்லப்பட்டுள்ளது. ஸ்ரீ ஸ்கந்த மஹாபுராணம் நாகரகாண்டம் சிவ ஷண்முக ஸம்வாதத்தில் ரதகாரபிராணர்களின் ஸம்ஸ்காரங்களை பற்றி அத்தியாயம் 5 சொல்லப்பட்டவைகள்: **श्रीमन्महर्षिव्यास प्रोक्त स्कान्दमहापुराणे नागरखण्डे शिवषणमुख संवादे विश्वकर्मोपाख्याने वैदिककर्मोपदेश रथकाराधिकारं अध्यायं ५॥** षणमुखोवाच । भगवान् सर्वलोकश सर्वज्ञजगतां प्रभो । एतेषां रथकाराणां गर्भाधानादि कर्म च । वदकेन प्रकारेण कर्तव्यं परमेश्वरा ॥ १ ॥ ईश्वरोवाच । संयक् पृष्ं त्वया भद्रषडाननसुवाचकं । सावधान मनाभूत्वा श्रुणु लोकहितं वचः ॥ २ ॥ विश्वकर्मा सुताह्येते रथकारास्तु पंच च । वैदिकेनैव मार्गेण तद्वँश्यानां विशेषतः ॥ ३ ॥ गर्भाधानं पुँसवनं सीमन्तोन्नयनं तथा । जातकर्म तथा नामकर्मापि विशेषतः ॥ ४ ॥ उपनिष्क्रमणं कर्म अन्नस्य प्राशनं तथा । चौळकर्मापि कर्तव्यं उपनीति विंशेषतः ॥ ५ ॥ पुनर्जनन रूपा सा उपनीति क्रिया मता । वर्षे गर्भाष्टमे चैव उपनीति क्रियामता ॥ ६ ॥ कर्तव्यं तद्विशेषेणह्याचार्येण समाधिना । पुण्याह वचनं पूर्व वेदघोष पुरस्सरं ॥ ७ ॥ पूर्वेद्युरेव कतत्व्यं नांदीमुखमतः परं ।अपरेद्युः प्रभातेषु मङ्गल स्नानमाचरेत् ॥ ८ ॥ धारयित्वा नवं सूत्रं पुण्याहं

वाचयेत्ततः। अग्निमादाय विधिवत्सम्यक् शास्त्रोक्त मार्गतः॥ ९॥ स्थापयित्वा चरुं पूर्व होमं कुर्याद्विशेषतः। पालाशाश्वत्थ खदिर समिद्भिः जुहूयात्ततः॥ १०॥ इन्द्राग्नि वरुणंच वायोश्च धनदस्य च। ईशानस्यच सूर्यस्य सोमस्य सवितुस्तथा॥ ११॥ सर्वेषामेव देवानां मन्त्रैताज्याहुतिस्तथा। जुहूयात् चरुहोमंच मन्त्रैषां पृथाक्पृथक्॥ १२॥ उपनीत ततः पश्चादाचार्यस्समिदाहुतीः। हावयित्वाथ शिष्येष हस्तग्रहण पूर्वकं॥ १३॥ देवताभ्यो बलेर्दानं ततो होमं समाचरेत्। ततो मौञ्जीपरीधानं कृष्णाजिन पुरस्सरं॥ १४॥ द्विजानामाज्ञया पश्चात् गायत्रीं अपिदेवतां। उपदिश्य जयादींच जुहूयात् मन्त्रतस्ततः॥ १५॥ अग्निकार्य ततः पश्चात् कृत्वा होमं समापयेत्। स्विष्टकृतं होममारभ्य पूणाहुतिमतः परं॥ १६॥ दद्यादेवंच विधिवत् त्रिसन्ध्यं होममाचरेत्। चतुर्थ दिवसे प्रप्ते पालाशं होममाचेत्॥ १७॥ एवं समाप्य विधिवदेपनीतिं विशेषतः। आचार्यस्तु ततः पश्यात् शिष्यानध्यापयेत्ततः॥ १८॥ ऋग्वें यजुर्वेदं सामवेदं विशेषतः। अथर्वणानतः पश्चात् लक्षणानि पृथक्पृथक्॥ १९॥ अष्टादशपुराणानि तथा षड्दर्शनन्यपि। ज्योतिः शास्त्रं विशेषेण शिल्पिशास्त्रं तथैवच॥ २०॥ चतुः षष्ठि कळाश्चापि धर्म शास्त्रं विशेषतः। एवं न कारयेत् जन्मभाविष्यति न संशयः॥ २१॥ इत्युक्तं ते तथा स्कन्द उपनीतिस्तु ते मया। एतेषां गोत्रमावक्ष्ये श्रुणु षणमुख तत्वतः॥ २२॥ मनोः **कौण्डिन्य** गोत्रस्स्यात् मयानां **अत्रि** गोत्रकः। त्वष्टा गोत्रं **भरद्वाजस्** दक्षा **गौतम** गोत्रजः॥ २३॥ **कश्यपं** शिल्पिगोत्रं स्यात् एवं गोत्रमुदाहृतं। एतेषां वैदिककर्म भविष्यति न संशयः॥ २४॥ एवं विधं वैदिककर्म कर्ता अकृत्वा त्रयाणां जगतामधीशः। जगद्गुरुस् सर्वगुरुस् सुराणां समस्तलोकस्य परिरक्षकस्ते॥ २५॥ **श्लोकसंख्या २३१** ஸ்ரீ ஷண்முகர் சொல்லியது: பகவானே ஸர்வலோகேச ஸர்வத்தின் காரண கர்த்தாவகிய பிரபுவே இப்புவியில் ரதகார பிராமணர்களுக்கான கர்பதானதி கர்மங்களை எப்படி சரியாக செய்ய வேண்டும் என்று சிவபெருமானிடம் கேட்கின்றார், அதற்கு ஈஸ்வரன் சொல்லியது ஆறுமுகனே உன்னுடைய சந்தேகத்திற்காக சரியான விளக்கத்தினை மனத்தில் பதியும் படியாக சொல்கின்றேன். விஸ்வகர்மா என்ற ருபுதேவனின் புத்திரர்களாகிய ரதகாரர்கள் ஐவர்கள் உள்ளார்கள். இவர்கள் வைதீக முறைப்படியாகவே விசேஷமாக அனைத்தினையும் செய்ய வேண்டும். கர்பதானம், பும்ஸவநம் ஸீமந்தோநயநம் முதலியவற்றினையும், ஜாதகர்மா நாமகர்மாவினை இங்ஙினமே விசேஷமாக செய்ய வேண்டும். உபநிஷ்கிரமம் மற்றும் அன்னபிராசன விதிமுறைகளும், சௌளம் மற்றும் உபநயனம் முதலியவைகளையும் வேத மார்க்கமாகவே செய்யவேண்டும். மறுப்பிறப்பாக உபநயனம் என்ற சடங்கு சொல்லப்படுகின்றது. இந்த பூணூல் என்ற சடங்கினை 8 வது வயதில் செய்வது விசேஷம் ஆகும். இச்செயலை தகுதி பொருந்திய ஆசாரியாரை வைத்து கொண்டு செய்ய வேண்டும். அப்போது புண்யாஹ வாசகங்களை சொல்லி வேதகோஷத்துடன் செய்ய வேண்டும். அதன் பின்னர் கர்தா தன்னுடைய புத்திரனுக்கு நாந்தீமுகம் என்ற சடங்கில் முன்னோர்களை பெயர்களை சொல்லி பித்ருகளை பூஜிக்க வேண்டும்.

மங்கல ஸ்நாநம் செய்விக்கப்பட்ட அப்பாலகனுக்கு புதிய துணியை அணிவிக்க வேண்டும். அக்னிமாதானம் என்ற கர்மாவை சாஸ்திரங்களில் சொல்லியப்படி செய்யவேண்டும். அப்படிப்பட்ட அந்த அக்னியை கொண்டு ஹோமங்கள் செய்ய வேண்டும். அந்த ஹோமத்தில் விசேஷமாக அன்னத்தினை அவிதர வேண்டும். பலாசம், அஸ்வத்தம், காதிரம் முதலிய யாகங்களுண்டான குச்சிகளைக் கொண்டு ஹோமம் செய்ய வேண்டும். அதில் இந்திரன், அக்னி, வருணன், வாயு மற்றும் குபேரனையும் ஈசானன், ஸூர்யன், ஸோமன் மற்றும் ஸவிதாவையும் மற்றுள்ள தேவர்களையும் வேத மந்திரங்களால் பூஜிக்க வேண்டும். மேலும் பூணூலும், மௌஞ்சியையும், கிருஷ்ணாஜநத்தினையும் விதிப்படி அணிவிக்க வேண்டும். பின்னர் காயத்தி சந்தஸில் அமைந்த ஸாவித்தி மந்திரத்தினை விதிப்படி ஆசாரியர் உபதேசிக்க வேண்டும். உபநயனத்தில் ஆசாரியர் ஸமிதா தானம் என்ற கர்மாவை சிறப்பாக செய்ய வேண்டும். அப்போது ஆசாரியர் பாலகனுடைய கையைப்பிடித்து அக்னி முன் அமர்த்த வேண்டும். அதன்பின்னர் அப்பாலகனுடன் தேவர்களுக்காக அவிர்பாகத்தினை தரவேண்டும். இறுதியில் அங்கு பூர்ணாஹுதியை ஹோமத்தில் செய்ய வேண்டும். இவ்வாறாக விதிப்படி விசேஷமாக உபநயனம் என்ற சடங்கினை செய்ய வேண்டும். வேதங்களாகிய ருக், யஜுர், ஸாமம், அதர்வம் மற்றும் பிருவாங்கிரஸம் முதலில் கற்கவேண்டும். பின்னர் உபவேதங்களாயும் வேத அங்கங்களையும் கசடறக்கற்க வேண்டும். இறுதியாக 18- புராணங்களையும் இதிஹாஹங்களையும் படித்துக்கொள்ள வேண்டும். இவ்வாறாக ஸமாவர்தனம் கோதானம் முதலிய அனுஷ்டங்களை சரிவர வைதீகமார்கமாக செய்ய வேண்டும் என்று ஸ்கந்தபெருமானுக்கு மஹாதேவனால் சொல்லப்பட்டது. இனி அவர்களுக்குண்டான கோத்திரங்கள் சொல்லப்படுகின்றது. முறையாக மனுவின் தொழிலைச் செய்பவர்களுக்கு **கௌண்டின்ய ரிஷி**யின் கோத்திரமும், மயனின் தொழிலைச் செய்பவர்களுக்கு **ஆத்ரேய ரிஷி**யின் கோத்திரமும், த்வஷ்டாவின் தொழிலைச் செய்பவர்களுக்கு **பரத்வாஜ ரிஷி**யின் கோத்திரமும், சிற்பதொழில் செய்யும் விஸ்வகர்மாக்களுக்கு **காஸ்யப** ரிஷியின் கோத்திரமும், தக்ஷாவின் தொழிலைச் செய்பவர்களுக்கு **கோதம ரிஷி**யின் கோத்திரமும் விசேஷமானது ஆகும். இதுவே இரதகார பிராமணர்களுடைய கோத்திரங்கள் ஆகும். இக்கோத்திரத்தினை சேர்ந்த இரதகாரபிராமணர்கள் வைதீக மார்க்கமாகவே அனைத்து கர்மாவினையும் செய்ய வேண்டும் என்று வேதத்தில் விதி செய்யப்பட்டுள்ளது என்று மஹாதேவன் முருகருக்கு கூறியுள்ளார் என்று நாகரகாண்டத்தில் சொல்லப்பட்டுள்ளது.

அனாதி வேதங்களிலிருந்து தற்பொழுது வரை வாழையடி வாழையாக இக்குலத்தினார்களுக்கென வேதப்பிரிவுகள், உபவேதங்கள் மற்றும் ஆகமங்கள் முறையாக வகுத்து இக்குல ரிஷிகள் வைத்துள்ளார்கள். வேதங்களில் அனைத்து பிரிவுகளையும் பயிலும் பிறப்புரிமையும், உபவேதங்களையும் இவற்றில் ஒன்றான ஸ்தாபத்திய வேதத்திலுள்ள விஸ்வகர்மாதி 32 சாஸ்திரங்களையும், இதற்கான விஸ்வகர்மீயம் முதலிய 32 உபசாஸ்திரங்களையும், மேலும் பாரம்பரியத்தினை உணர கார்க்கேய ரிஷியால் முதலில் சொல்லப்பட்டு பின்னர் காளஹஸ்தி ரிஷியால் புராணகாலத்தில் சொல்லப்பட்ட விஸ்வகர்ம புராணமும், தேவசில்பி விஸ்வகர்மாவினால் சொல்லப்பட்ட க்ஷீரார்வணாதி ஆகமங்கள் 28யையும் ஓதி உணர்ந்து, இதிஹாஸ புராணம் மற்றுள்ள அனைத்து ஸமய கிரந்தங்களையும் அறிந்து, வேத அங்கங்களுடன் முறையாக பயின்று சிருஷ்டி செய்தவர்களே பண்டைய காலத்திலிருந்த விஸ்வகர்ம பிராமணர்களாகிய ஆசார்யர்கள் ஆவார்கள். இக்காரணத்தினால் தான் பாரத்தில் அனைத்து பகுதிகளிலுள்ள மக்கள்கள் வேதம் அழைக்கும் பட்டபெயரான “ஆசார்யர்” என்ற பெயரிலே இக்குலத்தினர்களை அழைக்கின்றார்கள். சிலர் ஸமயம் மற்றும் மதகோட்பாடுகளை வரையறுத்து வைத்து

கொண்டு அதனால் தங்களை ஆசார்யர்கள் என்று தங்களை தாங்களே அழைத்துக்ககொள்வது வேதத்தின் கருத்துகளுக்கு விரோதமானது, அதுமட்டும் இன்றி மக்கள் இப்பாரதத்தில் அவர்களை அவ்வாறு அழைத்தார்கள் என்றும் ஆதாரம் மிகையாக இல்லை அழைக்கின்றார்கள் என்பதும் கண்கூடாகவில்லை. வேதங்களில் சிருஷ்டிகார்த்தாகளாகிய பிரம்ம வம்சத்தினைப் பற்றி சொல்லுமிடத்து தான் அப்பிரஜைகளை ஆசார்யர்கள் என்று சொல்லப்பட்டுள்ளார்கள். ஸாமவேதம் சாந்தோக்யோக்யோபநிஷத் அத்யாயம் 8 கண்டம் 15, தத்தை தத் ப்ரஹ்மா ப்ரஜாபதய உவாச ப்ரஜாபதிர் மனவே மனு: ப்ரஜாப்ய ஆசார்ய குலாத் வேதமதீத்ய யதாவிதாநம் குரோ: அதாவது இதை பிரம்மா பிரஜாபதியாகிய மனுவிற்கு சொன்னார், மனு பிரஜாபதி அவர்தம் வம்சத்திற்கு சொன்னார் இப்படியாக வேதம் ஆசார்ய குலத்தினர்கள் பயின்று வந்தார்கள் என்று சொல்லப்பட்டுள்ளது. இது மதுவித்யா பிராமணத்தில் உள்ளது. सामवेदीय छान्दोग्योपनिषत् अध्यायं ८ खण्डं १५॥ तद्धैतद् ब्रह्मा प्रजापतय उवाच प्रजापतिर्मनवे मनुः प्रजाभ्य आचार्य कुलाद् वेदमधीत्य यथाविधानं गुरोः॥ २॥

மேலும் பிரம்ம வம்சத்திலுத்த சிருஷ்டிகர்த்தாவின் வம்சங்களுக்கே ஸானக, ஸனாதனாதி ரிஷிகள், அதர்வண ரிஷி, அஸ்விநௌ ரிஷிகள், விஸ்வரூப ரிஷி, அபூதி ரிஷி, ஆங்கிரஸ ரிஷி முதலியவர்களின் கோத்திரங்கள் வருகின்றது என்ற ஆதாரம் யஜுர்வேதத்தின் பிருஹதாரண்யகத்தில் சொல்லப்பட்டுள்ளது. இந்த ரிஷிகளை பற்றி தைத்திரீய ஸம்ஹிதா காண்டம் 4 பிரச்னம் 3 அனுவாகம் 3 லும் அப்பர்யையானது விஸ்வகர்மா ரிஷியால் சொல்லப்பட்டுள்ளது. अथ ब्रह्म वँशः। अयस्य आङ्गिरस आभूतेस्त्वाष्ट्राद् आभूतिस्त्वाष्ट्रो विश्वरूपात् त्वाष्ट्रा विश्वरूपस्त्वाष्ट्रो अश्विभ्यां अश्विनौ दधीच आथर्वणाद् दध्यङ् अथर्वणे अथवणो दैवाद् अथर्वा दैवो मृत्योः प्राध्वँसनां मृत्युः प्राध्वँसनः प्रध्वँसनात् प्रध्वँसन एकर्षेकर्षि विंप्रचित्ते विंप्रचि व्यंष्टे व्यंष्टिः सनारोः सनारुः सनातनात् सनातनः सनगात् सनगः परमेष्टिनः परमेष्ठी ब्रह्मणो ब्रह्म स्वयंभु ब्रह्मणे नमः॥ ३॥ ஆகவே பிரம்ம வம்சமே ஆசார்ய பட்டத்திற்கு முழுமையானது. பிரஜாபதி, பரமேஷ்டீ, விஸ்வகர்மா முதலிய தேவபதவியும் இவர்களுக்குண்டானது ஆகும்.

மேலும் வேதத்தில் சொல்லிய ஆசார்ய பட்டத்தினை சில்பவேதத்திலும் மற்றும் இதிஹாஸ புராணங்களாகிய ஸாதாரண கிரந்தங்களும் மிகைப்படுத்தி ஆச்சார்யர்களை மஹாசாரியர்கள், தேவாசாரியர்கள் என்று சொல்லுகின்றது. அதற்கான ஸ்லோக ஆதாரங்கள்:

**मानसरशिल्पं शिल्पाचार्यलक्षणं अध्यायं २॥** *आचार्य* लक्षणै र्युक्त्तं स्थपति र्नाम धीयते। श्रतज्ञः सूत्रग्राही च रेखाज्ञः शात्रवित्तमः॥ १६॥ **शिल्पकाश्यपं पटलं २६ भर्गन्यासं॥** *आचार्यन्* पूजयेत् तत्र वस्त्रहोमांगुलीयकैः। शिल्पिनः पूजयत् तत्र वस्त्रैराभरणादिभिः॥ ४४॥ **लिङ्गपुराणं॥** पूर्वभागो सहस्रनामभिः पूजनाद् विष्णु चक्रलाभो अध्यायः ९८॥ अभिवाद्यो *महाचार्यो विश्वकर्मा* विशारदः॥ **ब्रह्माण्डपुराणं** वायुप्रोक्त्ते मध्यमभागे तृतीय उपोद्घातपादे अध्यातः ५८॥ *देवाचार्यस्य* महतो विश्वरूपस्य धीमतः॥ २०॥ विश्वकर्मात्मजश्चैव विश्वकर्मा मयः स्मृतः॥ २१॥ **साम्बपुराणं**

अध्यायं ९॥ *देवाचार्यस्य* तस्येयं दुहिता विश्वकर्मणः। १७॥ **पद्मपुराणं भूमिखण्डं अध्यायं ३९॥** प्रासाद् ध्वज देवानां प्रतिष्ठादिक कर्मणि। वापी कूप तडागानां गृह वास्तु मयं नृप॥ श्लोकं ८२॥ **नारदीयपुराणं पूर्वभागं अध्यायं १०७ मस्त्यपुराणं अध्यायं २९१ च॥** देवासुरविमर्दश्च वास्तुविद्या तथैवच॥ २७॥ प्रतिमालक्षणं तद्वद्देवतायतनं तथा। प्रासादलक्षणं तद्वं मण्डपानां च लक्षणं॥ २८॥ **शिल्पं मूलस्तम्भपुराणं॥** स्थपतीत्यादि कार्याणिसत् ब्रह्मकुलसंभवः। स्थपति स्थापकोश शिल्पि आचार्यो विश्वकर्मणः॥ आचार्यो विश्वकर्मा च आदिब्रह्म कुलोद्भवः। मनुस् मयस्तथा त्वष्टा शिल्पि विश्वज्ञ एव च॥ **श्लोकसंख्या २३९॥**

மானஸார ரிஷியின் சில்ப சாஸ்திரத்தில் அத்யாயம் -2ல்: ஸ்தபதி என்பவர் வேதமுதலானவற்றை கொண்டு சிருஷ்டி செய்பவர் இவரே விஸ்வகர்ம பிரம்ம முகோத்பவமாய் உண்டான ஆசார்யர் ஆவார். சில்பகாஸ்யம் படலம்: 26 ல் ஆசார்யரையும் சில்பிகளையும் யஜமானன் பூஜித்து வணங்கி அவர்களுக்கு வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் மோதிரங்களையும் தக்ஷணையாக தரவேண்டும் என்றும். லிங்கபுராணம் பூர்வ பாகம் அத்யாயம்: 98 இல் தேவாலங்களை சிருஷ்டி செய்யும் பொருட்டு மஹாசார்யரான விஸ்வகர்மாவை கண்டு சாஸ்திரங்களில் உள்ளபடி செய்யவேண்டுமாயும், பிரம்மாண்டபுராணத்தில் வாயு புரோக்த மத்யபாகத்தில் 3 வது உத்தபாதத்தில் அத்யாயம் 58 ல், தேவாசார்யரான விஸ்வரூப ரிஷி ஆனவர் விஸ்வகர்மா என்றும் தேவர்கள் அனைவர்களுக்கும் புரோஹிதர் என்றும் வர்தகி என்றும். ஸாம்பபுராணத்தில் அத்யாயம் 9ல் தேவாசார்யராகிய விஸ்வகர்மாவினால் ஆலயங்கள் விரைவில் வாஸ்துமுறைப்படி சிருஷ்டிக்கப்பட்டது என்றும். பத்மபுராணத்தில் பூமிகாண்டத்தில் அத்யாயம் 39 ல் பிராஸாதம் கொடிமரம் கிணறு ஏரி குளங்கள் கிரஹவாஸ்துக்குண்டானவைகள் மற்றும் தேவர்களை பிரதிஷ்டை செய்வதற்கான கர்மகிரியா விதிகள் வாஸ்துசாஸ்திரம் படி ஆசார்யர்கள் செய்தார்கள் என்றும் நாரதீயபுராணம் பூர்வபாகம் அத்யாயம் 107 மற்றும் மத்ஸியபுராணம் அத்யாயம் 291 அகியவற்றில் வாஸ்துலக்ஷணத்தின் படியே மண்டபம், பிராஸாதம், தேவர்களின் லக்ஷணங்கள் அத்தேவர்களை பிரதிஷ்டை செய்யவேண்டி விதி முறைகளின் படி விஸ்வகர்ம ஆசார்யர்கள் இப்பாரத தேசத்திலுள்ள ஆலயங்கள் அரண்கள் கிரஹங்களை படைத்தார்கள் என்று சொல்லப்பட்டுள்ளது. மேலும் சில்பம் மூலஸ்தம்ப புராணத்தில் ஸ்தபதிகளாகிய ஸ்தபதி, ஸூத்திரகிரஹி, வர்தகி மற்றும் தக்ஷர்கள் முதலிய சில்ப தொழிலினை செய்பவர்கள் பிரம்ம குலத்தை சேர்ந்தவர்கள் என்றும், ஸ்தபதி என்பவரும் ஆலயத்தினை நிலைநிருத்துபவர்களாகிய சில்பிகளாகிய ஆசார்யர்கள் விஸ்வகர்மா என்று அழைக்கப்படுபவர்கள் ஆவார்கள். இப்படிப்பட்ட விஸ்வகர்மாக்களாகிய ஆசார்யர்கள் ஆதிபிரம்ம குலத்தில் பிறந்தவர்கள். இக்குலத்தில் மனு, மயன், த்வஷ்டா சில்பி மற்றும் விஸ்வஜ்ஞர் முதலிய பஞ்ச பிரம்மாக்கள் உண்டானார்கள் என்று ஸ்கந்தருக்கு சிவபெருமான் சொல்லியதாக உள்ளது.

மேற்கண்ட வேத, சில்ப, புராண கிரந்தங்களிலிருந்து பிரம்ம வம்சத்தினார்களே பரிசுத்தமான ஆசார்யர்கள் என்பது தெளிவென விளங்கும். இவர்களே 1008 சிவாலங்களையும் 108 வைஷ்ணவாலங்களையும் 9 பிரம்மா ஆலங்களையும் 51 சாக்த ஆலங்களையும் 8 கணபதி ஆலயங்களையும் 6 ஷண்முக ஆலங்களையும் 4 ஸௌரா ஆலயங்களையும் மற்றுமுள்ள புத்த ஜைன திருவாலங்களையும்

புராணகாலத்தில் விஸ்வகர்ம பிராமணர்களே ஆவர்களுடைய வேத சில்ப கல்ப முதலியவற்றுடன் விஸ்வகர்மாகமங்களின் வழிப்படி பிரதிஷ்டை செய்யதார்கள் என்பதற்கு இதுபோன்ற அநேக கிரந்தங்களும் வேதமும் கோடி ஸூர்யபிரகாசமாக ஆதாரத்துடன் இருக்கின்றது. இவர்களால் சிருஷ்டிக்கப்பட்ட அனைத்து ஸமய தேவாலங்களையும் அனைத்து மதத்தவர்களும் ஸமூகத்தினரும் பூஜிக்கின்றார்கள் அதனால் தேவனின் அனுகிரஹத்தினை மக்கள் அனைவரும் அடைகின்றார்கள் என்பது இப்பாரதத்தில் காணும் கண்கூடான உண்மை ஆகும்.

ஆசார்யர் என்பதற்கு ஆசாரத்தினை கைக்கொண்டவர்கள் அல்லது பூஜை புனஸ்காரங்களை கடைப்பிடிப்பவர்கள் என்பது ஓர் அர்தமாக வேதத்திற்கு பிற்காலத்தில் ஸமயநெறிகளில் சொல்லியிருந்தாலும் வேதத்தில் ஓர் குலமாக நிக்ஷியத்து தேவர்களாலும் வேதரிஷிகளாலும் சொல்லப்பட்டிருக்க வேண்டிய அவசியமில்லை. மேலும் பிராமணர் என்ற வர்ணத்தினை சார்ந்தவர்கள் அனைவரும் ஆசார்யர் என்ற தவரான கருத்தினை திரும்பதிரும்ப சிலநூற்றாண்டுகளாக சிலபோலிகள் உபதேசிக்கின்றார்கள். இவைகள் ஸமயம் மற்றும் குலம் மற்றும் அவர்களுடைய ஜாதிய கிரந்தங்களில் மட்டுமே அப்படிப்பட்ட குறிப்புகளை வைத்துக்கொண்டு சொல்லிகின்றார்களே தவிர வேதத்தில் இவற்றிக்கு அங்கீகாரம் இல்லை ஆதாரமும் கிடையாது. ஏன்னென்றால் வேதகால நாகரீகம் தோன்றிட்ட காலம் ஆராய்ச்சியாளர்களால் 4500 வருஷங்களுக்கு முந்தியது என்று உலகளவில் நிரூப்பிக்கப்பட்டுள்ளது. இக்காரணத்தினால் தான் ஸிந்துசம வெளியில் தோன்றி வேதமொழி உலகத்தில் மூன்றாது இடத்தினை ஆராய்ச்சியாளர்கள் கொடுத்துள்ளார்கள் என்ற அறிவியல் பூர்வமான ஆய்வுகளை நாம் தெரிந்திருக்க வேண்டும். ஸாதாரண கிரந்தங்கள் அதாவது பாரதத்தில் ஸமய மதபேதங்கள் தோன்றி கிட்டதட்ட 1400 வருடங்களே ஆகின்றது. ஆகவே வேதங்கள் உபவேதங்களில் மற்றும் இதிஹாஸபுராணங்களிலும் பிரம்மாதி பஞ்சகணத்தினராகிய ஆசார்யர்களை சிறப்பாக மஹாச்சாரியர் மற்றும் தேவாச்சார்யர் என்ற பட்டங்களில் இந்த குலத்தினைர்களை அழைத்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. “பிராமணன்” என்பது ஓர் வர்ணத்தின் தர்மமே அன்றி ஒருபோதும் ஜாதியை குறிக்காது. அதேப்போல் “விஸ்வகர்மா” என்பது சிருஷ்டியில் சிறந்த தேவர்களும், ரிஷிகளும் அவர்தம் வம்சத்தினரும் அடைந்த மிகபெரிய பதிவியே ஆகும். இவ்வித பேதங்களை அறியாது சிலபோலிகள் தப்புதப்பாக சதுர்வர்ணங்களை குலமாகவும் ஜாதியாகவும் மாற்றி தப்பாக உபதேசம் செய்கின்றார்கள். நான்கு வர்ணத்தினருக்கும் தப்பகவே ஸாவித்ரீ வித்யாவில் சந்தஸ் உபதேமும் செய்கின்றார்கள். ஆகவே ஆச்சார்யர் என்ற குலப்பட்டம் பிராமண வர்ணத்தினர்கள் அனைவருக்கும் பொதுவானது கிடையாது என்பதனை நாம் கட்டாயம் தெரிந்துக்கொள்ள வேண்டும். மேற்குறித்த வேத உபவேத இதிஹாஸபுராணங்களின் படி சிருஷ்டிகர்த்தாக்களின் வம்சத்தில் உதித்த தேவபிராமணர்களே பரிசுத்தமான “ஆசார்யர்”கள் ஆவார்கள் என்பது நாம் அனைவரும் உணர்ந்திருக்க வேண்டும். இக்காரணத்தினால் தான் பாரதத்திலுள்ள அனைத்து ஸமூக மக்களும் இவர்களை மட்டுமே ஆசார்யர்கள் என்று அழைக்கின்றார்கள் என்பது வேதகாலத்திலிருந்து வரும் வழிமுறையாகும். **(சிலபோலிகள் ஸமயங்கள் உயர்வடைந்துக் கொண்டிருக்கும் காலத்தில் ஆசாரியர் என்பவர்கள் தொழில்செய்யும் ஸமூகத்தினர் என்றும் ஆச்சாரியர் என்பவர்களே ஸமய ஆகமங்களை பின்பற்றும் பிராமணர்கள் என்றும் பிரகடனப்படுத்தினார்கள் காரணம் தங்களை தாங்களே உயர்த்திக்கொள்வதற்காக செய்யப்பட்ட சூழ்ச்சியே இதிலுள்ள “ச்” என்ற மெய்யெழுத்து தவரான அக்ஷரச்சேர்க்கை ஆகும். ஆனால் வேதத்திலும், ஸ்தாபத்யவேதத்திலும், ஸாதாரண கிரந்தமாகிய இதிஹாஸ புராணங்களிலும் சரி வேதத்திலுள்ள கிரந்த அக்ஷர உச்சரிப்பான “ஆசார்யர்”**

**என்பதயே சிருஷ்டி கர்த்தாக்களுக்கு அளித்துள்ள பட்டம். இதுவே 100 சதவீதம் சரியான வேதாதாரம் மஹா குலத்தினர்களுக்கு ஆகும். இப்படியாக வேதப்படிப்பதாகவும் அதன் தர்மத்தினை காப்பாற்றுவதாக போலியாக பிராமண வர்ணத்தில் சிலர் இந்நூற்றாண்டிலும் சிருஷ்டிகர்த்தாக்களில் வம்சத்திலுதிக்காத அவர்கள் தங்களை "ஆசார்யர்" என்று அழைத்துக்கொள்ளவதும் விமர்சனம் செய்துக்கொள்வதும் வேதத்திலுள்ள அனைத்து தேவர்களையும், வேதரிஷிகளையும் அவர்தம் ஸ்ருதிகளையும் அவமானப்படுத்தியதர்கான சமமான மஹாபாவத்தினை செய்கின்றார்கள்.)** இவ்வாறாக பிராமண வர்ணத்திலுள்ள இதர குலத்தினையும் குடிமக்களையும் ஏனை மூன்று வர்ணத்தினை சார்ந்த இதர ஸமூகமக்கள் அவர்களை வேறுபட்ட குலபட்டப் பெயர்களால் அழைத்தார்கள் என்பதற்கு பாரதத்திலுள்ள பல ஸமூகங்களின் குலநூல்களிலும் ஆதாரம் உள்ளது. ஆசார்யர்கள் பாரதத்தில் உள்ள அனைத்து தேவாலயாதி சிருஷ்டிகளை அவர்தம் வேத, சில்ப. கல்ப மற்றும் ஆகமம் படிசெய்யதார்கள். ஆனால் சிருஷ்டிகர்த்தாவின் வம்சத்தில் ஸம்மந்தப்படாத சிலபேராசைகாரர்கள் அவர்களுடைய குல ஆகமங்களை வைத்துக்கொண்டு அதன்படியே அவர்கள் சொல்லி விஸ்வகர்ம பிராமணர்கள் சிருஷ்டிதார்கள் என்று சொல்லுவதற்கு வேதங்களிலும் சரி உபவேதமாகிய ஸ்தாபத்திய வேதத்திலும் சரி இதிஹாஸ புராணங்களிலும் சரி ஒரு ஸ்லோகங்கள் கூட ஆதாரங்களாக இல்லை. ஏன் ஆலயத்தில் பணிபுரியும் கர்த்தாக்கள் இந்த ஸ்தாபத்யத வேதத்தின் சாரம்சத்தினை தெரிந்துக் கொள்ள வேண்டும். உதாரணமாக அறிவுடைய யஜமான் தான் வசிக்க மிகப்பெரிய அரண்மனை கட்ட ஆரம்பிக்கும் போது சரி கட்டிமுடித்த பிறகும் சரி அதற்கான வேலைகள் எப்படி செய்யப்பட்டன எதைவைத்து செய்துமுடிக்கப்பட்டது எவைகள் அவற்றிக்கு உபயோகம் செய்யப்பட்டது என்ற அறிவுபூர்வமான ஒவ்வொரு விஷயத்தினையும் அறிந்து தெரிந்து வைத்துக் கொண்டிருக்கவேண்டும். இதுதான் சிருஷ்டியை பற்றிய பிரம்மஞானம் இதைத்தான் பிராமணன் அறியும் மிகமுக்கியமான அறிவு ஆகும். ஆகையால் தான் அச்சிருஷ்டியைப் பற்றிய விவரங்களை தங்களுடைய புஸ்தகத்தில் பதித்து வைத்திருப்பார்கள். ஏனெனில் பின்வரும் சந்ததிகளும் அதைப்பற்றி தெறிந்துக்கொண்டால் தான் பின்னாலில் நிகழும் இடர்பாடுகளை உடனடியாக அறிந்து அதனால் விளையும் ஆபத்துக்களை எளிமையான முறையில் தவிர்த்துவிட முடியும் என்பதற்காக தான் ஸ்தாபத்ய வேதத்தின் பெருமைகளை பற்றி சமயங்களிலும் குல ஆகமங்களிலும் சேர்க்கப்பட்டுள்ளது என்பது புத்திமான்களின் கூற்று. இதேப்போல தான் இதிஹாஸ புராணங்களிலும் ஸ்தாபத்யவேதத்தின் விதிகளை விஞ்ஞான மார்க்கமான விஷயங்களை மிகுதியாக சேர்த்து முனிவர்கள் தொகுத்து தந்துள்ளார்கள். அதற்காக விஸ்வகர்ம பிராமணர்கள் இவற்றினை வைத்துக்கொண்டு சிருஷ்டிதார்கள் என்று சொல்லுவது அறிவீனம். மேலும் வேதங்களின் மந்திரங்களும் சில்பவேதங்களின் கிரியைகளும் கல்பங்களிலுள்ள வைதீக முறைகளும் தொகுத்து புராணகாலத்திற்கு பின்னர் தொகுக்கப்பட்டவைகளே ஸமய குல ஆகமங்கள் ஆகும்.

வேதத்திலிருந்து மந்திரங்களும் (கிரியாபாதம்), ஸ்தாபத்யவேதத்திலிருந்து பிரதிஷ்டா விதிகளையும் (சரியாபாதம்), கல்பங்களிலிருந்து வைதீகவிதிகளையும் (ஞானபாதம்) இதிஹாஸபுராணங்களிலிருந்து பெருமைகளையும் (யோகபாதம்) ஆகிய இந்நான்கினையும் கொண்டு முனிவர்களால் தொகுத்துத் தரப்பட்டதே சமய மற்றும் குல ஆகமங்களே அன்றி அது வேறுகிடையாது. ஆகவே ஆகமங்கள் தோன்றிய காலங்களுக்கு முன்னே கல்பங்களும் சில்பங்களும் வேதங்களும் ஏன் இதிஹாஸ புராணங்களும் கூட தோன்றிவிட்டன என்று ஆராய்சியாளர்கள் நிரூபித்துள்ளார்கள். மேலும் அப்படி ஆகமங்களின் படி சிருஷ்டிகளை விஸ்வகர்ம பிராமணர்கள் செய்திருந்தால் இதிஹாஸ புராணங்களில் ஆகமங்களை பற்றி உயர்த்தி சிருஷ்டிக்கு

ஆதாரமானது என்று சொல்லியிருப்பார்களே அன்றி ஸ்தாபத்ய வேதம் என்றும் சில்ப வேதம் என்றும் வாஸ்து வேதம் என்று அதர்வணத்திற்கு உபவேதம் என்றும் சொல்லியிருக்க தேவையில்லை. ஆகமங்கள் என்பவைகள் குல நூல்களே அன்றி இது பாரததேசத்திலிருக்கும் அனைத்து ஹிந்துக்களுக்கும் பொதுநூல் அல்ல. ஆகமங்களை அக்குலத்தினவர்கள் அன்றி வேறு வர்ணத்தினர்களோ வேறு குலத்தினர்கலோ பயிலக்கூடாது என்று கண்டிக்கப்பட்டுள்ளது. மேலும் சமய குல ஆகமம் என்பது தேவர்களுக்கான பூஜை புனஸ்காரங்களை பற்றி அக்குல முனிவர்களால் சொல்லப்பட்ட புனிதமான அர்ச்சனை பத்ததியே. விஸ்வகர்ம பிராமணர்களுக்கும் தேவசில்பி விஸ்வகர்மாவினால் சொல்லப்பட்ட ஆகமங்கள் 28 (கார்க்கேயாகமம், க்ஷீரார்வண வ்ருக்ஷார்வனாதி ஆகமங்கள் 28 உள்ளது). இவைகள் ஸ்தாபத்ய வேதத்தினை பின்பற்றி பூஜைகளை விளக்கத்துடன் இருந்தாலும் இவைகள் உபவேதங்களில் சொல்லப்பட்ட 32 சாஸ்த்திரங்களை சேராது. ஹிந்துக்களுக்கு பொது நூல்களாக ஸ்ரீமத் பாகவத்த புராணத்தில் பரமஹம்ஸ ஸம்ஹிதையில் ஸ்கந்தம் 3 அத்யாயம் 12 லும், விஷ்ணுபுராணம் அம்சம் 3 அத்யாயம் 4 லும் பிரம்மாண்டபுராணம் பூர்வபாகம் அனுஷம் 2 அத்யாயம் 35 லும் சொல்லப்பட்ட வேத உபவேத வரிசைகள்.

**श्रीमद्भागवतपुराणं परमहंस्यां संहितायां स्कन्धं ३ अध्यायं १२॥ विष्णुपुराणं अंशं ३ अध्यायं ५ श्लोकं २७॥ ब्रह्माण्डपुराणं पूर्वभागं अनुषं २ अध्यायं ३५ श्लोकं ८९॥** मैत्रेय उवाच ऋग्यजुः सामाथर्वाख्यान् वेदान् पूर्वादिभिर्मुखैः। शास्त्रमिज्यां स्तुतिस्तोमं प्रायश्चित्तं व्यधात् क्रमात्॥ ३७॥ आयुर्वेदं धनुर्वेदं गन्धर्वं वेदमात्मनः। स्थापत्यं चासृजद्वेदं क्रमात् पूर्वादिभिर्मुखैः॥ ३८॥ इतिहासपुराणानि पंचमं वेदमीश्वरः। सर्वेभ्य एव वक्त्रेभ्यः ससृजे सर्वदर्शनः॥ ३९॥ **श्लोकसंख्या २४२॥** மைத்ரேய ரிஷி சொல்லியது. ஈஸ்வரனின் பஞ்ச முகோத்பவமாக ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் மற்றும் அதர்வாங்கிரஸ வேதங்கள் ரிஷிகளுக்கு உபதேசிக்கப்பட்டது. மேலும் அவரிடமுண்டான சாஸ்திரங்கள் முறையே விளக்கி சொல்லப்படுகின்றது. வேதங்கள் முதலில் உபதேசிக்கப்பட்ட பின்னர் ரிஷிகளுக்கு ஆயுர்வேதம், தனுர்வேதம், கந்தர்வவேதம் ஆத்மார்தமாக சொல்லப்பட்டது. ஸ்தாபத்யவேதம் நான்காவதாகவும் இதிஹாஸ புராணங்கள் ஐந்தாவது உபவேதமாகச் சொல்லப்பட்டது. இங்ஙனம் வேதங்களும் உபவேதங்களும் ரிஷிகளுக்கு உபதேசிக்கப்பட்டது. இவ்வாறாக 18 புராணங்களிலும் சொல்லப்பட்டுள்ளது. மேலும் புராணங்களில் ஸ்தாபத்ய வேதத்தினை அர்த்தசாஸ்திரம் என்று கூறுகின்றது. புராணகாலத்திற்கு பின் முனிவர்கள் எழுதிய அர்த்த சாஸ்திரமானது ஆங்கிரஸம், சுக்கிரம் மற்றும் பலஸ்மிருதிகளையும் ஆதாரமாக கொண்டு பின்னர் விரிவு செய்யப்பட்டதே. இதற்கும் வேதமாகிய சில்பத்திற்கும் ஒருபோதும் சம்பந்தம் கிடையாது. சாணக்கிய முனி சொல்லியதை வேதமேன இதிஹாஸ புராணங்களில் ஆதாரம் முற்றிலும் கிடையாது. இதற்கு ஆதாரமாக அதர்வவேதத்தின் சௌநக ரிஷின் சரணவியூகத்தில் பரிசிஷ்டம் கண்டம் 4 இல் अथर्वणं शौनकीय चरणव्यूह परिशिष्टं खण्डं ४ ॥ स्थापत्यवेदो अर्थशास्त्रं विश्वकर्मादि शिल्पशास्त्रं अथर्ववेदस्योपवेदः॥ ஸ்தாபத்ய வேதமே அர்த்த சாஸ்திரம் ஆகும். இவைகள் விஸ்வகர்மாவினால் சொல்லப்பட்டவைகள், விஸ்வகர்மாதி சில்பசாஸ்திரங்கள் அனைத்தும் அதர்வணவேதத்திற்கு உபவேதம் ஆகும் என்று

சொல்லப்பட்டுள்ளது. अथर्वणं सीतोपनिषत्॥ इतिहासपुराख्यमुपाङ्गं च प्रकीर्तितं। वास्तुवेदो धनुर्वेदो गन्धर्वश्च तथा मुने। आयुर्वेदश्च पञ्चैते उपवेदाः प्रकीर्तिताः॥ மேலும் அதர்வண வேதத்தினை பின்பற்றுபவர்களால் சொல்லப்படும் (108) உபநிஷத்துகளில் ஒன்றான ஸீதாவில் ஐந்து உபவேதங்களில் வாஸ்து வேதம் ஒன்றேனவும் இவைகள் வேதமோதும் முனிவர்களால் உலக நன்மையின் பொருட்டுச் சொல்லப்பட்டுள்ளது என்று கூறப்பட்டுள்ளது. अग्निपुराणं स्थापत्यवेदं विश्वकर्मशास्त्रं इति॥ அக்னிபுராணத்தில் ஸ்தாபத்தியவேதம் விஸ்வகர்மாவினால் உண்டான சாஸ்திரம் என்றும் தந்திரங்களும் விஸ்வகர்மாவினால் சொல்லப்பட்டது என்றும் ஆதாரங்கள் உள்ளது. இங்ஙினம் இவர் கூறியப்படியே பிரதிஷ்டா லக்ஷணங்களை உடைய கிரந்தங்கள் முனிவர்களால் எழுதப்பட்டுள்ளது என்று சொல்லப்பட்டுள்ளது. இவற்றிக்கு ஆதாரமாக ஸ்தாபத்யவேதத்திலுள்ள 32 பிரிவுகளை பற்றி மானஸார ரிஷி சொல்லியவைகள்:

## अथ स्थापत्यवेदे मानसार ऋषि प्रोक्त द्वात्रिंशति शास्त्रानि॥

१ विश्वकर्मा २ विश्वेचं ३ विश्वसारं ४ प्रबोधकं ५ वृतं ६ मयं ७ त्वष्टं ८ मनुं ९ मानविं १० मानकल्पं ११ मानसारं १२ प्रष्टं १३ मानबोधं १४ विश्वबोधं १५ नायं १६ आदिसारो १७ विशालं १८ विश्वकाश्यपं १९ वास्तुबोधं २० महातन्त्रं २१ वास्तुविद्यापतिं २२ पाराशरीयकं २३ कालयूपं २४ चैत्याख्यं २५ चित्रकं २६ आवर्यं २७ साधकसारं २८ भानुं २९ इन्दूं ३० नलं ३१ लोकज्ञं ३२ सौराख्यं॥ 1 விஸ்வகர்மா, 2 விஸ்வேசம், 3 விஸ்வஸாரம், 4 பிரபோதகம், 5 விருத்தம், 6 மயம், 7 துவஷ்டம், 8 மனும், 9 மானவம், 10 மானகல்பம், 11 மானஸாரம், 12 பிரஷ்டம், 13 மானபோதம், 14 விஸ்வபோதம், 15 நாயம், 16 ஆதிஸாரம், 17 விசாலம், 18 விஸ்வகாஸ்யபம், 19 வாஸ்போதம், 20 மஹாதந்திரம், 21 வாஸ்துவித்யாபதிம், 22 பாராசரீயகம், 23 காலயூபம், 24 சைத்யாக்கியம், 25 சித்திரகம், 26 ஆவர்யம், 27 ஸாதகஸாரம், 28 பானும், 29 இந்திரம், 30 நலன், 31 லோகஜ்ஞம், 32 ஸௌராக்கியம் முதலியவைகயே ஸ்தாபத்ய வேதத்திலுள்ள 32 பிரிவுகள் ஆகும். இவற்றிக்கு மேலும் விஸ்வகர்மீயம், மூலஸ்தம்பம், சில்பகாஸ்யபம், சகளாதிகாரம், பராசரீயம், ஆயாதிலக்ஷணம் முதலிய 32 உபசிற்பச் சாஸ்திரங்களும் உள்ளன.

## अथ विश्वकर्मागमं॥

**विश्वकर्मा उवाच** जयपृच्छागमश्चैव कस्मिन् स्थाने जगत्पते। विजयपृच्छ आगमश्च कुत्रस्थाने बभूव च॥ सिद्धार्थपृच्छ आगमश्च किं स्थाने च तथाभवत्। एवमस्मत् प्रसादं तु कुरु शास्त्रार्थकौशक॥ १ जयपृच्छागमं २ विजयपृच्छागमं ३ सिद्धार्थपृच्छागमं ४ अपराजपृच्छागमं ५ क्षीरार्णवं ६ वृक्षार्णवं ७ दीपार्णवं ८ वास्तुविद्या ९ विश्वकर्म विद्याप्रकाशं १० विश्वकर्म वास्तुशास्त्रं ११ ज्ञानरत्नं १२ समारंगण सूत्रधारं १३ वास्तुसारं १४ वास्तुमण्डलं १५ प्रासादमण्डलं १६ वास्तुमंजरिं १७ प्रमाणमंजरिं १८ वास्तुकौतुकं १९ वास्तुरत्नतिलगं २० जलाश्रयाधिकारं २१ विश्वकर्मागमं २२

वापिलक्षणं २३ विश्वकर्मशिल्पं २४ नारदीयशिल्पं २५ वास्तुराजसूत्रं २६ कलानिधिसूत्रं २७ सूत्रप्रतानं २८ रुपमण्डनरुपावतारौ ॥ ஸ்ரீ விஸ்வகர்ம ஆகமங்கள்: ரிஷி அபராஜிதர் என்பவருக்கு இவருடைய தந்தை ஸ்ரீ விஸ்வகர்மா சொல்லிய முதல் ஐந்து ஆகமங்களை பற்றிய விளக்கம் அபராஜிதபிருச்சாகமம் என்று அழைக்கப்படும் கிரந்தத்தில் சொல்லப்பட்டுள்ளது. இவைகளை மூலமாக வைத்துக்கொண்டு சுமார் 28 மேற்பட்ட ஆகமங்களை அவர்கள் வழி வரும் முனிவர்களால் தொகுத்துக் கொடுத்தவைகள். 1 விஸ்வகர்மா ஆகமம், 2 ஜயபிருச்சாகமம், 3 விஜயபிருச்சாகமம், 4 ஸித்தார்த்தபிருச்ச ஆகமம், 5 அபராஜித பிருச்சாகமம், 6 க்ஷீரார்ணவம், 7 விருக்ஷார்ணவம், 8 தீபார்ணவம், 9 வாஸ்துவித்யா, 10 விஸ்வகர்ம வித்தியா பிரகாசம், 11 விஸ்வகர்ம வாஸ்து சாஸ்திரம், 12 ஜ்ஞான ரத்தினம், 13 ஸமாரங்க ஸூத்திர தாரம், 14 வாஸ்து ஸாரம், 15 வாஸ்து மண்டலம், 16 பிரஸாத மண்டலம், 17 வாஸ்து மஞ்சரி, 18 பிரமாண மஞ்சரி, 19 வாஸ்து ரத்தின திலகம், 20 ஜலச்ரயாதிகாரம், 21 வாஸ்து கௌதூகம், 22 வாபி லக்ஷணம், 23 நாரதீய சில்பம், 24 வாஸ்து ராஜஸூத்திரம், 25 விஸ்வகர்ம சில்ப சாஸ்திரம், 26 வாஸ்து கால நிதி, 27 ஸூத்திரபிராதானம், 28 ருபமண்டந ருபாவதாரங்கள் முதலியவைகள் பாரதத்தில் பிரசித்தியாக உள்ளவைகள் ஆகும். மேலே சொல்லப்பட்ட ஸ்தாபத்ய வேதங்கள் 32 மற்றும் இதற்கான உபசாஸ்திரங்கள் 32 மற்றும் ஆகமங்கள் 28 மற்றும் விஸ்வகர்ம பிராமண ஸமூகத்தினர்களால் எழுதப்பட்டவைகள் தோராயமாக 50 கிரந்த நூல்களுக்கு மேலுள்ளது, ஆகமொத்தம் 108 சாஸ்திரங்களுக்கு மேல் தற்பொழுது இந்தியாவில் வந்துள்ளது என்று பண்டிதர்கள் ஆராய்வுகளில் நிருப்பிக்கின்றார்கள்.

புராதனகாலத்திலிருந்து தற்பொழுது வரை பிராமணர்கள் என்ற வர்ணத்தில் பல குலங்களும் குடிப்பிரிவுகளும் இருந்துக் கொண்டு இப்பாரததேசத்தில் வருகின்றது. சிருஷ்டி என்றால் இப்பாரதத்தின் தொன்மையான அனைத்து ஆலயங்களையும், ஆரண்மனைகளையும், கிரஹங்களையும், அணைகட்டுகள், கிணறுகள், ஏரிக்குலங்கள், வண்டிவாகனாதிகள், ஆபரணாதிகள், பாத்திரங்கள், ஆயுதங்கள், சித்திரங்கள், குலகர்மாவிற்கான தொழில் பொருட்கள் ஏனையப்பிறவும் படைத்தவர்கள் இப்பிரம்ம வம்ச பிராமணர்களே அன்றி ஒருபோதும் வேறுயாரும் கிடையாது. இத்தகைய புராதனச் சிருஷ்டிகளை புனராதானம் செய்யவும் ஸ்தாபிக்கவும் இவர்களுக்கே உண்டான வாழ்வுரிமை ஆகும். இவர்களை தவிர ஏனையோர்களுக்கு கிடையாது அப்படிசெய்தால் நாட்டினை ஆளும் அரசுக்கு அரிஷ்டமுண்டாகும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது. பூஜிக்க வேண்டியவர்களாக இந்த விஸ்வகர்ம பிராமண சில்பிகளைப் போற்றி புகழுகின்றது ஏனைய குல மற்றும் சமய நூல்கள். ஆனால் தற்பொழுது புராதனமானவற்றையும், ஆலயங்களையும் பணம் ஸம்பாதிக்கும் நோக்கில் அனைவர்களும் பொது ஏலமிட்டுவிடுகின்றார்கள், அதேபோல் கும்பாபிஷேக காரியங்களையும, அர்ச்சக தொழிலையும் பொது ஏலமிட முடியுமா ? முடியாது ஏனெனில் அது அவர்களுடைய வாழ்வுரிமையாகும். அதுபோல தான் இதுவும் விஸ்வகர்ம பிராமணர்களுக்கு வேதகாலத்திலிருந்து 5000 வருஷங்களாக வரும் வாழ்வுரிமை ஆகும். மேலும் வேத உபவேத இதிஹாஸ புராணங்களை அடுத்து தோன்றிய கிரந்தங்களாகிய சமயமத நூல்களிலும் குல ஆகமங்களிலும் சொல்லப்பட்ட சில ஆதாரங்கள்:

वैखानसे मरीचि प्रोक्ते पटलं २३ ॥ वैखानसे काश्यपीये ज्ञानकाण्डे अध्यायं २७ ॥ वैखानसे अत्रि प्रोक्ते अध्यायं ७ श्लोकं ११ ॥ पाञ्चरात्रे अनिरुद्ध संहिते अध्यायं ३१ श्लोकं १९ ॥ पाञ्चरात्रे अहिर्बुध्न्य

संहिता अध्यायं १४ श्लोकं २६॥ पाञ्चरात्रे जयाख्यसंहिता अधिक पाठे श्लोकं १२६॥ पाञ्चरात्रे पौष्करसंहिता अध्यायं ३६ श्लोकं ३९९॥ नेत्रतन्त्रं शाक्तागमं श्लोकं २६॥ अंशुमं शैवागमं पटलं २५ श्लोकं ४४॥ कामीकं शैवागमं पटलं ६५ श्लोकं २२ पटलं ६८ श्लोकं २६॥ **शिल्पिनं पूजयेत्तत्र वस्त्रैश्चाभरणादिभिः। गर्भस्थानं प्रविश्याथ कर्ताचाचार्य शिल्पिभिः॥ सुलक्षणं तु पाषाणं दृष्ट्खेवा चान्यत्र बाहृतम्। विश्वकर्मकुलोद्भूतं समाज्ञाप्य तु शिल्पिनम्॥ शिल्पशास्त्रोक्त मार्गेण शिल्पिभि कारयेत् क्रमात्॥ श्लोकसंख्या २४५॥**

ஸ்ரீ வைகானஸ ஆகமத்தில் மரீசி ஸம்ஹிதையில் படலம் 23 லும், காஸ்யப ஞானகாண்டத்தில் அத்யாயம் 17 லும் அத்திரி ஸம்ஹிதையில் அத்யாயம் 7 ஸ்லோகம் 11 லும், ஸ்ரீ பாஞ்சிராத்திர ஆகமத்தில் அநிருத்த ஸம்ஹிதா அத்யாயம் 31 ஸ்லோகம் 19 லும், அஹிர்புத்திநிய ஸம்ஹிதை அத்யாயம் 14 ஸ்லோகம் 16 லும், ஜயாக்கிய ஸம்ஹிதா ஸ்லோகம் 126 லும், புஸ்கர ஸம்ஹிதா அத்யாயம் 36 ஸ்லோகம் 399லும், ஸ்ரீ சாக்த ஆகமம் நேத்ரதந்திரம் ஸ்லோகம் 26 லும், ஸ்ரீ சிவாகமம் அம்சுமம் படலம் 25 ஸ்லோகம் 44 லும், காமீகம் படலம் 65 ஸ்லோகம் 22 லும் முதலிய சமய மத குல நூல்களிலும் சில்பியை யஜமானன் பூஜித்து வணங்கி வஸ்த்திரங்கள், ஆபரணங்கள், தக்ஷணையுடன் தான்யங்களையும் மற்றும் பால்பசுக்களையும் சந்தோஷத்துடன் சில்பகர்மாவிற்காகக் கொடுக்க வேண்டும் என்றும். இப்படிப்பட்ட சில்பிகள் கருங்கற்கள் மற்றும் சிற்பத்திற்கு ஏற்ற பொருட்களால் சில்பம் செய்ய வேண்டும் என்றும், அவை கட்டாயம் சிற்பிகளின் சிற்ப சாஸ்திரங்களில் உள்ளபடி செய்ய வேண்டும் என்றும். அப்படிப்பட்ட இச்சிற்பிகள் விஸ்வகர்மா குலத்தில் பிறந்தவர்களாக இருக்க வேண்டும் என்று பெருமைப்படுத்தி சொல்லப்பட்டுள்ளது. இவற்றினை தற்பொழுதுள்ள விஸ்வகர்ம பிராமண பெரியோர்களும் ஆதீனத்தினர்களும், ஆலயகர்த்தாக்களும் உணர்ந்து அரசிடம் முறையிட்டோ அல்லது அதற்கான வழிவகைகளைச் செய்யவேண்டும் அல்லது ஏனையோர்கள் புராதன ஆலயங்களுக்கான சில்பகிரியைகளை செய்ய அரசும், அர்ச்சகர்களும் அனுமதி செய்ய கூடாது அப்படி செய்யும் பொருட்டு அவற்றின் பாரம்பரியமும் பரிசுத்தமும் கெட்டுவிடும். இதனால் அரசுக்கும், ஆதீனத்திற்கும், பீடாதிபதிகளுக்கும், அர்ச்சகர்களுக்கும் அரிஷ்டம் கட்டாயம் உண்டாகும் என்று சாஸ்த்திரங்கள் கூறுகின்றன.

இன்றும் வெளிநாட்டினரும் வியக்கும் வண்ணம் அறிவுதிறத்துடன் விஞ்ஞான மதிநுட்பத்துடன் சிருஷ்டிக்கப்பட்ட புராதனநகரங்களும் தேவாலங்களும் பாரததேசத்திலுள்ள ஜனங்கள் அனைவர்களையும் அனுகிரஹத்திக் கொண்டுள்ளது. இவர்களால் சிருஷ்டிக்கப்பட்ட பொருட்களை கொண்டே ஒவ்வொரு மனிதனின் குலமும் கோத்திர அபிவிருந்தியும் வேதகாலத்திலிருந்து வருகின்றது. ஒரு மனிதனை பண்புள்ளவனாக கடமையுணர்வு உள்ளவனாக மற்றுவது கர்மா என்ற செயல் ஆகும். இக்கர்மாவை தங்களுடைய தபோ வலிமையால் உலகிலுள்ள உயிரினங்களுக்கும் மனிதர்களுக்கும் படைத்துக் காட்டியவர்கள் விஸ்வகர்ம பிராமணர்களே. ஒரு தனிமனிதன் தனக்கு அல்லது தனது குலகர்மாவினை சரிவர செய்தாலே ஏனைகுலத்தினர்களும் மற்ற உயிர்களுக்கும் பயன்படும் வகையில் இருக்கும். இவ்வாறாக மக்கள் தொண்டாகிய கர்மாவை கடவுள் தொண்டாக செய்தால் ஒவ்வொரு மனிதனுக்கும் ஸமயங்களே தேவைப்படாது. இதைதான் வேதம் சொல்கின்றது. ஸமயங்களுக்கும் மதகோட்பாடுகளுக்கும் அப்பார்ப்பட்டது

வேதம் ஆகும். ஸமயங்களும் மதங்களும் தான் வேதத்தினை தன்னிஷ்ட படி பயன்படுத்தி கொள்ளுமே தவிர வேதத்தில் இவைகள் இல்லை காரணம் பாரதத்தின் மிகமிக தொண்மையாக அநாதிகாலத்தில் முதலில் தோன்றிய தர்ம நூல்கள் வேதங்களே ஆகும். இவற்றினை வைத்துக்கொண்டே அனைத்தும் பின்தொடர்கின்றது.

வேதமானது ஸம்ஹிதையில் மந்திரமாகவும், பிராமணங்களிலும் (பிராமணங்கள், ஆரண்யகங்கள் மற்றும் இதை சேர்ந்த உபநிஷத்துக்கள்), கல்ப ஸூத்திரங்களிலும் இருக்கும். வேதம் என்பது மந்திரம் பிராமணம் இவற்றை சேர்ந்த கல்பங்கள் முதலியவைகளை குறிக்கும். பலர் தவறுதலாக ஸம்ஹிதை மட்டுமே வேதம் என்று சொல்கின்றார்கள். ஆனால் வேதத்தில் முதன்மையான பாடம் ஸம்ஹிதை இரண்டாவது பாடம் பிராமணங்கள் மூன்றாவது பாடம் கல்பங்கள் ஆகும். ஸம்ஹிதையில் விடுபட்டு போன பாடங்கள் பிராமணத்திலும் கல்பத்திலும் இருக்கும், ஸம்ஹிதையிலும் பிராமணத்தில் விடுபட்ட பாடங்கள் கல்பங்களிலும் இருக்கும். இவைகள் அனைத்தும் ஒன்றை ஒன்று சார்ந்தே இருக்கும் வேறுபட்டு இருக்காது. ஆனால் கல்பங்களில் சுருதிகளை விட மிகுதியாக பிற்காலத்தில் ஸ்மிருதிகள் சேர்க்கப்பட்டும் உள்ளது. அந்த ஸ்மிருதி வாக்கியங்கள் மட்டும் தான் ஒருபோதும் வேதத்தினை (சுருதியை) சாராதது ஆகும். இவற்றிக்கான வேத மந்திர ஆதாரம்.

## अथ यजुर्वेदीय काठक ब्राह्मणं ॥

ऋग्वेदं शाकलं म४ः सू५८ः३ शांखायनं अ८ःसू८ ॥ यजुर्वेदं वाजःसं १७ः६१ । काण्वःसं १९ः५ । काठःसं ४०ः४४ । मैःसं १ः६ः२८ । तैःआ १०ः१०ः२ ॥ अथर्व पैप्पलातं ८ः१३ः३ ॥ यजुर्काठके ब्राह्मणं ६ ॥ अथर्वणे गोपथ ब्राह्मणं पूर्वभागं २ः १६ ॥ यास्कऋषि निरुक्तं अध्यायं १३ अनुः ७ ॥ ருக்வேதம் சாகளம் மண்டலம் 4 ஸூக்தம் 85 மந்திரம் 3, சாங்காயநம் அத்யாயம் 8 ஸூக்தம் 8, யஜுர்வேதம் வாஜஸநேயிந ஸம்ஹிதா அத்யாயம் 17 மந்திரம் 61, காண்வ ஸம்ஹிதா அ:19, மந்திரம் 5, சரககாடக ஸம்ஹிதா ஸ்தானம் 40 மந்திரம் 28, தைத்திரீய ஆரண்யகம் அத்யாயம் 10 பிரபாடகம் 10 அனுவாகம் 2, மைத்தீராயணீ ஸம்ஹிதா காண்டம் 1, பிரபாடகம் 6, மந்திரம் 28, அதர்வவேதம் பைப்பலாத ஸம்ஹிதா கண்டம் 8 அனுவாகம் 13 மந்திரம் 3, யஜுர் காடக பிராமணம் 6, அதர்வண கோபத பிராமணம் பூர்வபாகம் 2 பிராமணம் 26 லும், வேதாங்கம் யாஸ்க ரிஷி நிருக்த்தம் அத்யாயம் 13 அனுவாகம் 7 லும் எவையெவைகள் வேதத்தின் பகுதிகள் என்று சொல்லப்பட்ட வேத மந்திரத்தின் மூலமாக நிருபிக்கப்பட்ட விவரங்கள்: **ऋषिः वामदेवः गोतमः छन्दः त्रिष्टुप् देवता महात्मा ॥** चत्वारि शृङ्गा त्रयो अस्य पादा द्वे शीर्षे सप्तहस्तासो अस्य । त्रिधा बद्धो वृषभो रोरवीति महो देवो मर्त्यां आ विवेश ॥ **चत्वारि शृङ्गा** इति वेदा वा एतदुक्ताः **சத்வாரி ஶ்ருங்க3ா** நான்கு கொம்புகளையுடையவர் என்பது வேதத்திற்குண்டான நான்கு பிரிவுகள் அல்லது ஹோதாக்களை குறிக்கும் । **त्रयो अस्य पादा** इति त्रीणि सवनानि **த்ரயோ அஸ்ய பாத3ா** மூன்று பாதங்கள் உடையவர் என்பது மூன்று வித யாகங்களாகிய பிராத ஸவனம் (அக்னி), மத்தியந்தின ஸவனம் (இந்திரன்) மற்றும் ஆர்பவ ஸவனம் (ருபுதேவன்) என்ற ஸோமயாகங்களை

குறிக்கும் । **द्वे शीर्षे** इति प्रायणीयोदयनीये **த்3வே ஶீர்ஷே** இரண்டு தலைகளையுடையவர் என்பது இரவுபகலை அல்லது பிரம்மோதனம் மற்றும் பிரவர்கியாவை குறிக்கும் । **सप्तहस्तास** इति सप्त छन्दांसि **ஸப்தஹஸ்தோ அஸ்ய** ஏழுகைகளை கொண்டவர் அதாவது ஏழு சந்தசுகளை குறிக்கும் । तस्मात् सप्तार्चिषः सप्त समिधः सप्त इमे लोका। येषु चरन्ति प्राणा गुहाशया निहिताः सप्त सप्त அதாவது பண்கள் (அ) ஏழு றுஷிகள் (அ) யாகங்கள் செய்ய உதவும் ஏழு வகையான மரக்குச்சிகள் (அ) ஏழு லோகங்கள் இதைபோன்ற ஏழு ஏழுவிதமான ஒற்றுமையை கொண்டவைகளை குறிக்கும் । **त्रिधा बद्धो** इति त्रिधा बद्धो **मन्त्र ब्राह्मण कल्पैः த்ரித4ா ப3த்3தே4ா** மூன்றுவிதமானது வேதம் அதாவது மந்திரங்கள் பிராமணங்கள் இவற்றுடன் கல்பங்கள் இம்மூன்றின் வடிவத்தில் மறைந்துள்ள வேதங்கள் । **वृषभो रोरवीति** रौरवणमस्य सवनक्रमेण **வ்றுஷபே4ா ரோரவீதி** றுஷபத்தின் மீது அமர்ந்த அதாவது காளையின் அதிதேவனாகிய கடவுள் மூன்று யாகங்களிலும் முறையாக அமர்த்தப்பட்டார். । ऋग्भिर्यजुभिः सामभिरथर्वभिर्यदेनं ऋग्भिः शंसन्ति यजुर्भिर्यजन्ति सामभिः स्तुवन्त्यथर्वभिर्जपन्ति। **महो देवो** इति महादेवो **மஹோ தே3வோ** என்றால் றுக்குகள், யஜுஷ்கள், ஸாமங்கள் மற்றும் அதர்வங்கள் முதலிய வேதங்களில் றுக்குகள் போற்றிடவும், யஜுஷ்கள் யாகங்கள் செய்யவும், ஸாமங்கள் கானங்களால் பாடவும் மற்றும் அதர்வாங்கிரஸங்கள் ஜபங்களுக்காகவும் மஹாத்மாவினால் கற்பிக்கப்பட்டவை. । **मर्त्यां आ विवेश** मनुष्याणां तस्योत्तरा भूयांसि निर्वचनाय **மர்த்யாகு3ம் ஆ விவேஶ** । चतुर्मुखाश्च चतुर्वेदाश्च चतुर्युगा अग्नयश्च चत्वारोऽभवन्॥ ४॥ அதாவது மனிதர்கள் இறவாப்புகழை இப்புவியில் அடைந்து வீடுபோறு அடைவதற்காக தான் நான்கு வேதங்களும், நான்முகனும், நான்கு யுகங்களும், நான்கு அக்னிகளும், நான்கு உபவேதங்களாகிய ஆயுர்வேதம், தனுர்வேதம், கந்தர்வவேதம் மற்றும் சில்பவேதம் அகியவற்றினை தேவன் சிருஷ்டித்து அருளினார் என்று வேதம் கூறுகின்றது. सन्ति चैषां समानाः **मन्त्राः कल्पाश्च ब्राह्मणानि च**। व्यवस्थानं तु तत्सर्वं पृथग् वेदेषु तत्स्मृतं॥ गोपथं पूर्वगाभं प्रपाठकं ५ ब्राह्मणं २५॥ ५॥ இப்படியாக வேதமானது மந்திரங்களாகவும், கல்பங்களிலும் மற்றும் பிராமணங்களிலும் சுருதி என்ற ஸ்தானத்தில் வேதமாக நிறைதுள்ளது என்கிறது அதர்வண கோபத பிராமணம் பூர்வபாகம் பிரபாடகம் 5 பிராமணம் 25 ல் சொல்லப்பட்டுள்ளது.

## अथ अग्नि आधान विधिः॥

**கனல் கொண்டு யாகம் செய்வதற்கான விதி: (அக்நி ஆதாந விதி:)** வேதங்களில் வர்ண அனுஷ்டானத்தினை கடைப்பிடிக்கு குலங்களுக்குத் தக்கவாறு யாகங்களில் மந்திரங்கள் சொல்லும் மரபு இருந்துள்ளது. அனைவரும் பொதுவாக ஒரு காலத்தில் செய்யும் விதியும் சொல்லப்பட்டுள்ளது. இந்த யாகங்கள் செய்வதற்கான அக்நியைப் பெறுவாதற்கான காலங்கள் வேதபிராமணங்களில் தெளிவுடச் சொல்லப்பட்டுள்ளது.

முதல் முன்று வர்ணத்தினர்கள் தேவ வழிப்பாட்டில் அதிகப்பிரியம் உடையவர்களாக வேதத்தில் காணப்படுகின்றார்கள். நான்காவது வர்ணத்தினர்கள் அனு அளவே கடைப்பிடித்துள்ளார்கள். இவர்கள் சொல்லும் மந்திரங்கள் அதன் பண்கள் அதாவது சந்தங்கள் விதியை வைத்தே யாகங்களில் சிறப்பிடம் பெறுகின்றன. இதன் விவரத்தினை வேதத்திலுள்ள ஆதாரத்தினைக் கொண்டு இங்கு காண்போம். இதில் தான் சிருஷ்டிகார்த்தாக்களுக்கு சொல்லப்பட்ட சந்தங்களின் ஆதாரம் சொல்லப்படுகின்றது. **मैत्तरायणी संहिता काण्डं १ प्रपाठकं ६ अनुवाकं १ ॥** भूर्भुवस्स्वः आङ्गिरसां त्वा देवानां॰ व्रतेनादधे। अग्नेष्ट्वा देवस्य व्रतेनादधा। इन्द्रस्य त्वा मरुत्वतो व्रतेनादधे। मनोष्ट्वा ग्रामण्यो व्रतेनादधे॥ ६॥ யஜுர்வேதம் மைத்தராயணீ ஸம்ஹிதா காண்டம் 1 பிரபாடகம் 6 அனுவாகம் 1 இல், பூர் புவஸ் ஸ்வ: என்ற இம்மூன்று வியாஹ்ருகளின் வர்ணங்களின் தேவர்களாக முதலில் சொல்லப்படுபவர் ஆங்கிரஸர் தேவன் ஆவார். இவரே பிராமண வர்ணத்தின் கர்த்தாவும் இவ்வர்ணத்தின் விரதத்தின் அதிதேவனும் ஆவார். இவர்கள் இத்தேவனின் அனுகிரஹத்தினால் அக்னியை கைக்கொண்டு வேத யாகங்களைச் சொய்ய வேண்டும். இந்திரன் அரசுபுரியும் க்ஷத்திரிய வர்ணத்தின் தேவன் ஆவார். கிராமணர்களாகிய வைஸ்யர்களுக்கு மருத்வானும், மனுதேவன் கர்த்தாக்கள் ஆவார். இம்மூன்று வர்ணத்தினை சேர்ந்த குடிமக்கள் அனைவரும் யாகங்களை செய்யும் பொருட்டு அவர்களுக்குண்டான தேவர்களைக் விரத்தின் மூர்த்தியாக முதலில் வழிபாடு செய்ய வேண்டும் என்று சொல்லப்படுகின்றது.(1) **चरककाठक संहिता स्थानं ७ अनुवाकं ७१ ॥** भूर्भुवस्स्वरऽङ्गिरसां त्वा देवानां व्रतेनादध। आदित्यानां त्वा देवानां व्रतेनादधे। द्यौर्मह्नासि भूमिर्भूम्ना तस्यास्ते देव्यदित उपस्थे अन्नादमन्नाद्यायान्नपत्यायादधे॥ ७॥ சரககாடக ஸம்ஹிதா ஸ்தானம் 7 அனுவாகம் 71 இல், மூன்று வியாஹ்ருதிகளையும் சொல்லி அதன் வர்ணத்தின் தேவர்களை கூறுகின்றது. ஆங்கிரஸதேவன் பிராமண வர்ணத்திற்கும், ஆதித்ய மூர்த்தி க்ஷத்ரியர்களுக்கும், வைஸ்யர்களுக்கு த்யாவபிருதிவீயும் சொல்லப்படுகின்றார்கள்.(2) **ऋग्वेदं ५:२१:१ ॥ यजुर्वेदं चरककाठक ७:७७ ॥ सामवेदं ८२२ ॥ ऋषिः ससः आत्रेयः छन्दः अनुष्टुप् देवता आङ्गिरः मनुः ॥** मनुष्वत्त्वा नि धीमहि मनुष्वत्समिधीमहि। अग्ने **मनुष्वदङ्गिरो** देवान् देवयते यज॥ ८॥ ருக்வேதம் மண்டலம் 5 ஸுக்தம் 21 மந்திரம் 1, யஜுர்வேதம் சரககாடகம் ஸ்தானம் 7 மந்திரம் 77, ஸாமவேதம் மந்திரம் 822 ஆகியவற்றிலுள்ள ஆதாரம். **றுஷி: ஸஸ: ஆத்ரேய: சந்த: அனுஷ்டுப் தேவதா ஆங்கிர: மனு:** மனுஷ்வத் த்வா நி தீ4மஹி மனுஷ்வத் ஸமிதீ4மஹி, அக்3நே **மனுஷ்வத3ங்கி3ரோ** தே3வாந் தே3வயதே யஜ. (3) (அக்னியை மனுக்கள் முதலில் சிருஷ்டிக்க நினைத்தார்கள், ஸமித்துகளில் இருந்து மனுக்கள் உன்னை வெளிப்படுத்தினார்கள். மனு வம்சத்திலுதித்த ஆங்கிரஸரே நீங்கள் தேவர்களை அக்னியில் போற்றுவீர்களாக) முதல் வர்ணத்தின் அக்னிக்கு கர்த்தாவாகிய ஆங்கிரஸ ரிஷி வேதத்தில் பூர்வ மனு என்று சொல்லப்பட்ட மனு-பிரஜாபதியின் புதல்வர், மனு-பிரஜாபதி ஸ்ரீ விஸ்வகர்மாவின் புத்திரன் ஆவார். மேலும் அக்னியை முதலில் தன்னுடைய தபோ வலியையால் அனைத்து தேவர்களையும் சிருஷ்டித்து அவர்களுக்கு உபயோகமாக படைத்துக்காட்டியவர் ஸ்ரீ விஸ்வகர்ம-பிரஜாபதியே ஆவார். ஆதாரம் மைத்தராயணீ ஸம்:2:243**मैत्तरायणी २:२४३** ,

தைத்திரீயம் ஸம்4:2:10 **तैत्तिरीयं ४:२:१०**, வாஜயநேயீனம் ஸம்: 13:44 **वाजसनेयिनं १३:४४** ,

காண்வம் ஸம்:14:47 **काण्वं १४:४७** ஆகிய ரிஷிகளின் யஜுர்வேத ஸம்ஹிதைகளில் இம்மந்திரத்தினை கூறிய ரிஷி: விரூபாங்கிரஸர் இவர் அங்கிரோ கணத்தினை சேர்ந்தவர் ஆவார். மேலும் விஸ்வாமித்திரின் மகன் மதுச்சந்த ரிஷியும் அக்னியின் கர்த்தாவை பிராஜாபதி விஸ்வகர்மா என்று அக்னிசயனத்தில் கூறியுள்ளார். **ऋषिः विरूपः आङ्गिरसः छन्दः त्रिष्टुप् देवता विश्वकर्माग्निः॥** यो अग्निरग्नेस्तपसो अधि जातः शोचात् पृथिव्या उत वा दिवस्परि। येन प्रजा **विश्वकर्मा** व्यानट् तमग्ने हेडः परि ते वृणक्तु॥ ९॥ **ऋषिः मधुच्छन्दः वैश्वमित्रः छन्दः त्रिष्टुप् देवता विश्वकर्माग्निः॥** मातेव पुत्रं पृथिवी पुरीष्यं अग्निंस्वे योनावभारुखा। तां विश्वै दैवैर्ऋतुभिः संविदानः **प्रजापतिर्विश्वकर्मा** वि मुञ्चतु॥ १०॥ யஜுர்வேதத்தின் இவ்வாதாரம் "சதுர்வேதீய விஸ்வகர்ம ஸம்ஹிதா" என்ற புஸ்தகத்தில் உள்ளது. இக்காரணத்தினால் தான் அதர்வண வேத கோபத பிராணமத்தில் இவர் பிரஜாபதி என்றும் பிரஜாபதியின் புத்திரர் என்றும் அதர்வாங்கிரஸர்கள் அழைக்கப்படுகின்றார். மேற்சொன்ன ஆதாரங்கள் பரிசுத்தமான சிருஷ்டிகர்த்தாக்களின் கோத்திர மூலம் ஆகும். இதைக்கொண்டே பொதுவாக பிராமண வர்ணத்தினர்கள் அனைவருக்கும் அக்னி ஆதானம் என்ற கர்ம விஷேசித்து வேதத்தில் சொல்லப்படுகிள்றது. **कपिष्ठलकठ संहिता अध्यायं ६ अनुवाकं ९॥** आङ्गिरसा त्वा देवानां व्रतेनादध इति ब्राह्मणेनाधेयः। ये वै देवानां अङ्गिरसस्ते ब्राह्मणस्य प्रत्येनसो अग्निर्वायुर्वाग्बृहस्पतिः। ततोबन्धुरस्य यज्ञस्तत आयनः। यतो बन्धुरेवास्य यज्ञो यत आयनः। तत एनं प्रतीच्छति॥ ११॥ इन्द्रस्य त्वा मरुत्वतो व्रतेनादध इति राजन्येनाधेयः। ये वै देवानां राजानस्ते राजन्यस्य प्रत्येनस इन्द्रो वरुणो धाता त्वष्टा। ततो बन्धुरस्य यज्ञस्तत आयनः। यतो बन्धुरेवास्य यज्ञो यत आयनः। तत एनं प्रतीच्छति॥ १२॥ मनोस्त्वा ग्रामण्यो व्रतेनादध इति वैश्येनाधेयः। मरुतो वै देवानां विशः। ते वैश्यस्य प्रत्येनसः। ततो बन्धुरस्य यज्ञस्तत आयनः। यतो बन्धुरेवास्य यज्ञो यत आयनः। तत एनं प्रतीच्छति॥ १३॥ யஜுர்வேதம் கபிஷ்டலகட ரிஷியின் ஸம்ஹிதா அத்யாயம் 6 அனுவாகம் 9 இல், ஆங்கிரஸதேவன் விரதங்களுக்கு தேவன் ஆவார் இவரே பிராமண வர்ணத்தினர்களுக்கு குரு என்றும், பிராமணர்களின் தேவன் ஆங்கிரஸ மூர்த்திக்கும், அக்நி, வாயு, வாசஸ்பதி(விஸ்வகர்மா), பிருஹஸ்பதி முதலியர்களின் வம்சத்தினர்களுக்கும் காயத்திரீ சந்தஸு சொல்லப்பட்டுள்ளது. இவர்களை முதன்மையாக வைத்து யாகங்கள் செய்யவேண்டுமென சொல்லப்படுகின்றது. இதேப்போல் க்ஷத்திரிய வர்ணத்தினர்களுக்கு இந்திரன் தேவனாவார், இங்ஙினம் அரசர்களுக்கு இந்திரனையும் மற்றும் வருணன், தாதா, துவஷ்டா ஆகியோர்களின் வம்சத்தினர்கள் த்ரிஷ்டுப் சந்தஸினைக் கொண்டு யாகங்களை செய்யவேண்டும். வைஸ்யர்களாகிய வர்ணத்தினைக் கொண்ட கிராமண்யர்களாகிய குலங்கள் மனுவை தேவனாகக் கொள்ள வேண்டும். மருத்வான்களின் வம்சத்திலுத்த கோத்திரகாரர்களாகிய விசர்கள்(வைஸ்ய:) பிரத்யேகமாக யாகங்களில் ஜகதீ சந்தஸில் வேதங்களை ஓதி

நடத்த வேண்டுமாய் நிக்ஷியக்கப்படுகின்றார்கள். இவ்விதமாக பிராமணாதி வர்ணத்தின் தேவர்கள் சொல்லப்படுகின்றார்கள் யஜுர்வேதத்தில். (4) **तैत्तिरीय ब्राह्मणं काण्डं १ः अष्टकं १ः अनुवाकं ४ः ब्राह्मणं ९॥** भृगूणां त्वाऽङ्गिरसां व्रतपते व्रतेनादधामीति भृग्वाङ्गिरसामादध्यात्। १४। आदित्यानां त्वा देवानां व्रतपते व्रतेनादधामीत्यन्यासां ब्राह्मणीनां प्रजानां। १५। वरुणस्य त्वा राज्ञो व्रतपते व्रतेनादधामीति राज्ञः। १६। इन्द्रस्य त्वेन्द्रियेण व्रतपते व्रतेनादधामीति राजन्यस्य। १७। मनोस्त्वा ग्रामण्यो व्रतपते व्रतेनादधामीति वैश्यस्य। १८। ऋभूणां त्वा देवानां व्रतपते व्रतेनादधामीति रथकारस्य। यथादेवतमग्निराधीयते। न देवताभ्य आ वृश्चयते। वसीयान्भवति॥ १९॥ யஜுர்வேதம் தைத்திரீய ரிஷியின் பிராமணம் காண்டம் 1 அஷ்டகம் 1 அனுவாகம் 4 பிராமணம் 9 இல், பிருகுக்கள் ஆங்கிரஸர்கள் முதலிய தேவர்கள் பிருவாங்கிரஸர்கள் முதலிய பிராமணர்களின் விரத்தின் தேவனாவார், ஆதித்யன் பிராமணாதி வர்ணத்தின் விரத்தின் தேவன் ஆவார், வருணன் சிற்றரசர்களின் தேவன் ஆவார், இந்திரன் க்ஷத்திரியர்களின் தேவன் ஆவார், மனுக்கள் வியாபாரிகளான வைஸ்யர்களுக்கு தேவன் ஆவார், ருபுதேவன் ரதகார பிராமணர்களின் தேவன் ஆவார். இவர்களுடைய விரத்தின் தேவனும் அவர்களே ஆவார்கள். **मैत्तरायणी संहिता काण्डं २ प्रपाठकं ६ अनुवाकं ५। चरककाठक संहिता स्थानं १५ अनुवाकं ५ च॥** वैष्णवस्त्रिकपलस्तक्षरथकारयोगृहे। सर्वायसानि दक्षिणा॥ वैष्णवस्त्रिकपलो। वामनो दक्षिणा॥ त्वाष्ट्रोऽष्टाकपालो दक्षिणो रथवाहनवाहो॥ २०॥ **मन्त्रसंख्यः २०॥ आपस्तम्ब सूत्रे प्रश्नं १८ कण्डिका १०॥** वैष्णवं त्रिकपालं त्रयोदशं तक्षरथकारयोगृहे॥ सर्वायसानि दक्षिणा॥ तक्षणो रथकारस्य वेत्येके॥ **आपस्तम्ब सूत्रे प्रश्नं २० कण्डिका ५॥** यो न विद्याद् ब्राह्मण जातमुतेयुस्तान् पृच्छेयुः कियद्यूयं अश्वमेधस्य वित्थेति॥ यो न विद्यात्तं जित्वा तस्य गृहात् खादं पानं चोपनिवपेयुः॥ यद् ब्राह्मणानां कृतान्नं तदेषामन्नं॥ **रथकारकुले** वसतिर्भवति॥ इह धृतिः स्वाहेति सायं अश्वस्य चतुर्षु पत्सु चतस्रो धृतीर्जुहोति॥ யஜுர்வேதத்தில் மைத்தராயணீ ரிஷியின் ஸம்ஹிதாவில் காண்டம் 2 பிரபாடகம் 6 அனுவாகம் 5 மற்றும் சரககாடக ரிஷியின் ஸம்ஹிதா ஸ்தானம் 15 அனுவாகம் 5 இல் சொல்லப்பட்டவைகள். ஸ்ரீ ராஜ ஸூயயாகத்தில் விஷ்ணுவுக்கு அவிர்பாகமாக தரவேண்டிய மூன்று கபால பவமானங்களை தக்ஷ-ரதகாரர்களாகிய ருபுக்களுக்கு தரவேண்டுமாய் நிக்ஷயக்கப்படுகின்றது. அவர்களுக்கு வேண்டியதை மரியாதையுடன் தக்ஷிணையாக தர வேண்டுமாக சொல்லப்படுகின்றது. ரதகாரர்கள் தங்களுடைய சிருஷ்டியை வேத சாஸ்திரத்துடன் கற்பிக்க சிறிய-பாலகர்களை (வாமனன்) அவர்களுடைய கிருஹத்தில் கொண்டு சேர்க்கவேண்டுமாய் இந்த யாகத்தில் சொல்லப்படுகின்றது. த்வஷ்டாக்களுக்கு எட்டு கபாலம் பவமானம் அவர்தம் கிருஹத்தில் தரவேண்டுமாய் சொல்லப்படுகின்றது. இவர்களுக்கு தக்ஷிணையாக ரதவாஹனங்கள் தாஸர்களைத் தரவேண்டும் என கூறப்பட்டுள்ளது. மேலும் இவற்றிக்கு ஆதாரமாக ஆபஸ்தம்ப சிரௌ ஸூத்திரம் ஸூத்திரம் பிரச்னம் 18 கண்டிகா 10 லும் பிரச்னம் 20 கண்டிகா 5

லும் இரதகார குலத்தில் பிறந்த பிராமணர்களின் பெருமையை அஸ்வமேத மற்றும் ஸ்ரீ ராஜஸூய மஹாயாகங்களில் பங்குபெறும் விதத்தினை கூறுகின்றது.

**यजुर्वेदे श्रौतसूत्रे अग्नि आधान निरूपणं ॥**

**मानवसूत्रे प्राक्सोमे अध्यायं ५ः खण्डं ३ः अनु १४ ॥** भूर्भुवोऽङ्गिरसां त्वा देवानां व्रतेनादध इति। अङ्गिरसस्यादध्यादग्नेष्ट्वेत्यन्येषामिन्द्रस्य त्वेति राजन्यस्य मनोष्टेति वैश्यस्यछदि त्वेति सर्वत्रानुषजति ॥ **वराहसूत्रे अध्यायं ५ः खण्डं १ः अनु १॥** भूर्भुवोऽङ्गिरसां त्वा देवानां व्रतेनादधानीत्याङ्गिरसो ब्राह्मण आदधीन। भृगूणां त्वेति भार्गवो। भृग्वङ्गिरसां त्वेति भार्गवाङ्गिरस। आदित्यानां त्वा देवानामित्यन्ये। अग्नेष्ट्वा देवस्येति च। इन्द्रस्य त्वेति राजन्यो। मनोष्टेति वैश्य। ऋभूणाँ त्वेति रथकार। आछदि त्वेति सर्वेषां ॥ **बोधायन सूत्रे प्रश्नं ३ कण्डिका १६ ॥ वैखानस सूत्रे प्रश्नं १ कण्डिका ११ ॥ भरद्वाज सूत्रे प्रश्नं ५ कण्डिका ६ अनुः ७ ॥ आपस्तम्बसूत्रे प्रश्नं ५ कण्डिका ११ अनुः ७ ॥** भृगूणाँ त्वा देवानां व्रतपते व्रतेनादधामीति भार्ववस्य आदध्यात्। आङ्गिरसां त्वा देवानां व्रतपते व्रतेनादधामीति यो ब्राह्मण आङ्गिरसः स्याथिति तैत्तिरीय ब्राह्मणं ॥ யஜுர்வேதத்தின் கல்பங்களில் சதுர்வணத்தினை சேர்ந்தவர்களுக்கான தேவர்கள் ஸோமயாகத்தில் உபதேசிக்கப்படுகின்றார்கள். இவர்கள் யாகத்தில் ஓதும் மந்திரங்களுக்கான சந்தஸுக்களும் வேதத்தில் ஆதாரத்துடன் இருக்கின்றன. மானவ ரிஷியின் சிரௌத ஸூத்திரத்தில் பிராக்ஸோம யாகத்தில் அத்யாயம் 5 கண்டம் 3 அனுவாகம் 14 லும், வராஹ ரிஷியின் ஸூத்திரம் அத்யாயம் 5 கண்டம் 1 அனுவாகம் 1 லும், போதாயன ரிஷியின் ஸூத்திரம் பிரச்னம் 3 கண்டிகா 16 லும், வைகானஸ ரிஷியின் ஸூத்திரம் பிரச்னம் 1 கண்டிகா 11 லும், பரத்வாஜ ரிஷியின் ஸூத்திரம் பிரச்னம் 5 கண்டிகா 6 அனுவாகம் 7 லும், ஆபஸ்தம்ப ரிஷியின் ஸூத்திரம் பிரச்னம் 5 கண்டிகா 11 அனுவாகம் 7 லும் சொல்லிய தேவதா ஆதாரங்கள். பிராமண வர்ணத்தினை சேர்ந்தவர்களுக்கு ஆங்கிரஸர், பிருகு, ஆதித்யன், ருபு முதலியவர்கள் தேவர்கள் ஆவார்கள். இவர்களே இவ்வம்சத்தில் உண்டானவர்களுக்கான விரதத்தின் குலதேவதா ஆவார்கள். பொதுவாக பிராமண வர்ணத்தினர்களுக்கு மூல குலத்தெய்வாமாக சிருஷ்டி கர்த்தாவாகிய ஆங்கிரஸ-பிரஜாபதி அனைத்து கல்ப ஸூத்திரங்களிலும் பொதுவாகச் சொல்லப்பட்டுள்ளார். அடுத்து க்ஷத்திரிய வர்ணத்தினை சேர்ந்தவர்களுக்கு மிகப்பெரும்பான்மையாக இந்திரன் குலத்தெய்வமாக சொல்லப்படுகின்றார். வருணன் சிற்றரசர்களுக்கு குலத்தெய்வம் ஆவார். வைஸ்ய வர்ணத்தினை சேர்ந்த குலங்களுக்கு மருத்வான் சொல்லப்படுகின்றார்கள். **ऋग्वेदीय शांखायन सूत्रे अध्यायां १४ खण्डं ३३ ॥** गायत्रच्छन्दसो ब्राह्मणाः। त्रिष्टुप् छन्दसः क्षत्रियाः। जगच्छन्दसो विशः। अनुष्टुप् छन्दसः शूद्राः ॥ சூத்திரர்களுக்கு ஆசதி தேவமாக சொல்லப்படுகின்றார் அல்லது விஸ்வதேவர்கள் சொல்லப்படுகின்றார்கள். இவ்வாதாரம் ருக்வேதத்தின் சாங்காயன ரிஷியின் சிரௌத ஸூத்திரத்தில் அத்யாயம் 14 கண்டம் 33 இல் சொல்லப்பட்டுள்ளது. **"காயத்ரச் சந்தஸோ ப்ரஹ்மணா: த்ரிஷ்டுப் சந்தஸ: க்ஷத்ரியா: ஜகதி சந்தஸோ விச: அநுஷ்டுப் சந்தஸ: சூத்ரா:"** என்பது மூலமாகும். சதுர்வர்ணத்திற்கும் மனு-பிரஜாபதியே அதிகாரியாக வேத- சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றார். ஆகவே

வேதத்திற்கு பின்னர் தோன்றிய ஸாதாரண கிரந்தங்களாகிய 18-ஸ்மிருதிகளிலும், 18-புராணங்களிலும், ஸமய மற்றும் குல ஆகமங்களிலும் வர்ணாச்சிரம தர்மத்தினை தன்னிஷ்டம் போல் மாற்றியும், ஏனைய குலதர்ம விதிகளை கலங்கப்படுத்தி சிலப்போலியான பிராமணர்கள் இவற்றில் இடைச்செருகல் செய்துவிட்டார்கள் என்பதற்கு ஆதாரமாக அநாதி வேதமே ஸர்வத்தின் சாக்ஷியாக இப்பாரத்திலிருக்கும் அனைத்து ஹிந்துக்களுக்கும் விளங்குகின்றது. அவரவருக்கான சந்தங்களுடன் வேதமோதும் அதிகாரத்தினை வேதங்கள் நம்மக்களுக்கு ஆதாரத்துடன் கூறுகின்றது. அதைப்போல் புரோஹிதத்துவமும் யாகமியற்றும் விதியும் தேவதா ஆராதனை விதியும் பிராமண வர்ணத்தினர்களே அனைவர்களுக்கும் செய்ய வேண்டுமென வேதம் பெருமையுடன் உரைக்கின்றது. இதுவரை என்னால் தொகுக்கப்பட்ட ஆதாரங்களிலிருந்து அனைத்து வர்ணங்களைப் பற்றி தெரியக்கூடிய உண்மையான விவரங்களிலிருந்து ஸாதாரண ஸ்மிருதிகள், ஸ்லோகங்களிலுள்ள கிரந்தங்களைக் காட்டிலும் வேதங்கள் காலத்தினால் மிகப்மிக பழமைவாய்ந்தது ஆகும். ஆகவே எந்தவோரு வர்ணாச்சிரம விதிகளுக்கும் அவர்களுடைய பண்பாட்டினைக் காணவும் 100 சதவீதம் ஆராய்வதற்கு மிகமிக சரியாக தர்ம நூல்கள் நம்முடைய வேதங்களே ஆகும் என்பது நமக்கு புலனாகின்றது.

| கண-வம்சங்கள் | வர்ணாச்ரமம் | தேவன் | மந்திர-சந்தஸ் |
|---|---|---|---|
| பிரம்ம-கண: | பிராமணாள் | விஸ்வகர்மா | காயத்திரீ: |
| பிரஜாபதி-கண: | பிராமணாள் | மனு-பிரஜாபதி: | காயத்திரீ: |
| அங்கிரோகண: | பிராமணாள் | ஆங்கிரஸ: | காயத்திரீ: |
| பார்க்கவ-கண: | பிராமணாள் | பிருகு: | காயத்திரீ: |
| ருபுகண: | பிராமணாள் | ருபு: | காயத்திரீ: |
| ஐந்திர-கண: | க்ஷத்திரியன் | இந்திர: | திரிஷ்டுப் |
| வருண-கண: | க்ஷத்திரியன் | வருண: | திரிஷ்டுப் |
| மருத்வ-கண: | வைஸ்யாள் | மருத்வ: | ஜகதீ: |
| ஆசதி: | சூத்திராள் | விஸ்வதேவ: | அனுஷ்டுப் |

மேலும் கதைகள், நாடகங்கள், இதிஹாஸங்கள், புராணங்களில் சொல்லப்பட்ட தேவர்களை காட்டிலும் முதன்மையானவர்கள் வேதத்திலுள்ள தேவர்கள் ஆவார்கள். இவர்களுக்கே அதிக ஆற்றலும் தெய்வத்தன்மையும் பலமும் கீர்த்தியும் உடையவர்கள் என்று வேதகாலத்திலிருந்த நான்கு வர்ணத்திலுள்ள குலத்தினையும் குடிப்பிறப்புகளையும் சார்ந்த ரிஷிகளாலும் சொல்லப்பட்டுள்ளது. மேலும் வேதத்தில் இதிஹாஸ புராணங்களில் சொல்லியதைப் போன்ற மும்மூர்த்தி கொள்கைகள் வேதத்தில் முற்றிலும் கிடையாது. மேலும் **"மஹோதேவா"** என்ற சொல் ருக்வேதத்தில் **அக்னி, இந்திரன், ஸவிதா, த்வஷ்டா** முதலிய தேவர்களை தான் வேதரிஷிகள் கூறிப்பிட்டுள்ளார்கள். யாகங்களில் முதன்மையான ஸோம யாகத்தில் சொல்லப்பட்ட மூன்று தேவர்களின் பெயர்கள் நான்கு வேதத்தின் பிரிவுகளில் அவர்களை மந்திரங்கள், பிராமணங்கள் மற்றும் கல்பங்கள் கூறும் விதங்கள் அனைவரும் தெரிந்துக்கொள்வதற்காக.

| மும்மூர்த்தி | முதல்யாகம் | இரண்டாவது | மூன்றாவது |
|---|---|---|---|
| **ஸோமயாக தேவதா** | **அக்னி:** | **இந்திர:** | **ருபு:** |
| ருக்-மந்திரம் | ஶ்யேன: | ஸுபர்ண: | ஸகா (ருபு) |
| யஜுர்-மந்திரம் | ஶ்யேன: | ஸுபர்ண: | ருபு: |
| ஸாம-மந்திரம் | ஶ்யேன: | வ்ருஷப: | ஸ்வர: கயா |
| அதர்வ-மந்திரம் | ஶ்யேன: | வ்ருஷப: | ருபு: |
| யஜுர்-அதர்வம் | அக்நி: | இந்திர: | ஸுதன்வந: |
| பிராமணங்கள் | வஸு: | ருத்திர: | ஆதித்ய: |
| கல்பங்கள் | அக்னி: | இந்திர: | ருபு: |

ஆகவே நாம் முதன்மையாக வைத்துக்கொள்ள வேண்டிய ஹிந்துகளின் கிரந்த நூல்களின் வரிசைகள் அனைவரும் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும். இந்நூல்களின் தீர்மானங்களே நம்முடைய பாரத தேசத்தின் பண்பாட்டிற்கு கருவூலமாக திகழ்கின்றன. இதுவே சதுர்வர்ணத்திலுள்ள அனைத்து குலங்கள் மற்றும் குடிகளுக்கு மூலாதாரம் ஆகும்.

1) வேதங்கள் (ருக், யஜுர், ஸாமம், அதர்வாங்கிரஸங்கள்)

2) உபவேதங்கள் (ஆயுர், தனுர், கந்தர்வம், ஸ்தாபத்யம், இதிஹாஸபுராணங்கள்)

3) வேத அங்கங்கள் (வியாக்ரனம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம், சீக்ஷா)

## ருபு ஸம்ஹிதாவிலுள்ள அனுவாக அத்யாயங்களை பற்றி விவரங்கள்:

இப்புத்தகத்தில் 1 முதல் 13 அத்யாயங்கள் அதாவது 1 முதல் 65 அனுவாகங்களில் வேத பிராமணங்களும் றுபுக்களை பற்றிய கல்ப ஆதாரங்களும் தொகுக்கபட்டுள்ளது. அனுவாங்கள் 66 முதல் 70 வரை ஸ்மிருதிகளாகிய இதிஹாஸ புராணங்களில் ருபுதேவன் நிதாகருக்கு சொல்லியவைகளும், 71 முதல் 100 வரையான அனுவாகங்கள் ருபுதேவனை ஸ்தாபத்ய வேதத்தின் படி பிரதிஷ்டை செய்யவதற்கான விஷயங்களும் தொகுக்கப்பட்டுள்ளது. இதில் 1 முதல் 70 வரையிலான அனுவாங்களை முழுமையாக தேவநாகரி எழுத்துகளில் வடிவமைக்கப்பட்டுள்ளது. 71 முதல் 100 வரையிலான அனுவாகங்களுக்கு தேவநாகரியிலும் தமிழிலும் செய்யப்பட்டுள்ளது. இது தமிழ் மொழி தெரிந்த புரோஹிதர்கள் மற்றும் சில்பிகளுக்கு பயன்படும் வகையில் செய்யப்பட்டுள்ளது. இது முழுக்க முழுக்க ருக்வேதத்தின் மந்திரங்களை பயன்படுத்தி செய்யப்பட்டது ஆகும். எந்தமொழிகளில் புஸ்தகங்களை செய்தாலும் அதற்கு ஆதாரமானது தேவநாகரி புஸ்தகங்களே ஆகும். ஆகையால் தான் 1 முதல் 100 வரையுள்ள அனுவாகங்களை பாரதத்தின் அனைபகுதிகளிலும் உள்ளவர்கள் படித்து தெரிந்து கொள்ளும் வகையில் தேவநாகரத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

ருபுதேவர்களை 11 ஸூக்தங்களால் ரிஷிகள் ஓதிய ருக்வேத ஸூக்தங்கள் அனுவாகம் 1-11 வரை கொடுக்கப்பட்டுள்ளது. சாகளறுஷி, பாஷ்கள றுஷி, சாங்காயன றுஷி, கௌஷீதக றுஷி மற்றும் அஸ்வலாயன றுஷிகளின் சாகைகளில் வரும் 10 மண்டலத்திலும், 64 அத்யாயங்களிலும் மற்றும் 8 அஷ்டகத்தில் வரும் 11 - ஸூக்தங்களுக்கு றுஷியின் பெயர் சந்தஸின் பெயர் தேவதா ஆதாரங்கள்: மண்டலம்-1ல் ஸூக்தம்-20: ஆங்கிரஸரின் பௌத்திரரும் காண்வ றுஷியின் புத்திரருமான மேதாதிதி றுஷியால் காயத்திரீ சந்தஸில் ஓதப்பட்டது.(1) ஸூக்தம்-110: மனுவின் பௌத்திரரும் ஆங்கிரஸ றுஷியின் புத்திரருமான குத்ஸ றுஷியால் த்ரிஷ்டுப் மற்றும் ஜகதீ சந்தஸில் ஓதப்பட்டது.(2) ஸூக்தம்-111: மனுவின் பௌத்திரரும் ஆங்கிரஸ றுஷியின் புத்திரருமான குத்ஸ றுஷியால் த்ரிஷ்டுப் மற்றும் ஜகதீ சந்தஸில் ஓதப்பட்டது.(3) ஸூக்தம்-161: ஆங்கிரஸரின் பௌத்திரரும் உசத்ய றுஷியின் புத்திரருமான தீர்கதம றுஷியால் த்ரிஷ்டுப் சந்தஸில் ஓதப்பட்டது.(4) மண்டலம்-3ல் ஸூக்தம்-60: குசிகரின் பௌத்திரரும் காதிந றுஷியின் புத்திரருமான விஸ்வாமித்ர றுஷியால் ஜகதீ சந்தஸில் ஓதப்பட்டது.(5) மண்டலம்-4ல் ஸூக்தம்-33: ஆங்கிரஸரின் பௌத்திரரும் கோதம றுஷியின் புத்திரருமான வாமதேவ றுஷியால் த்ரிஷ்டுப் சந்தஸில் ஓதப்பட்டது.(6) ஸூக்தம்-34: ஆங்கிரஸரின் பௌத்திரரும் கோதம றுஷியின் புத்திரருமான வாமதேவ றுஷியால் த்ரிஷ்டுப் சந்தஸில் ஓதப்பட்டது.(7) ஸூக்தம்-35: ஆங்கிரஸரின் பௌத்திரரும் கோதம றுஷியின் புத்திரருமான வாமதேவ றுஷியால் த்ரிஷ்டுப் சந்தஸில் ஓதப்பட்டது.(8) ஸூக்தம்-36: ஆங்கிரஸரின் பௌத்திரரும் கோதம றுஷியின் புத்திரருமான வாமதேவ றுஷியால் த்ரிஷ்டுப் சந்தஸில் ஓதப்பட்டது.(9) ஸூக்தம்-37: ஆங்கிரஸரின் பௌத்திரரும் கோதம

றுஷியின் புத்திரருமான வாமதேவ றுஷியால் த்ரிஷ்டுப், அனுஷ்டுப் சந்தஸில் ஓதப்பட்டது.(10) மண்டலம்-7ல் ஸூக்தம்-48: சில்பகஸ்யபரின் பௌத்திரரும் மைத்ராவாருணி றுஷியின் புத்திரருமான வஸிஷ்ட றுஷியால் த்ரிஷ்டுப் சந்தஸில் ஓதப்பட்டது.(11) மேற்படி றுக்வேதத்திலுள்ள ஸூக்கதங்களின் எண்ணிக்கை 11 இது அனுவாகங்கள்-11 வரையுள்ளது ஆகும். ருபுதேவனை ஸோம யாகத்தில் மூன்றாம் தினம் பூஜிக்க ரிஷி விஸ்வாமித்ரர் சொல்லிய ஸவனதேவர்களைப் பற்றிய ஸூக்தங்களை ருக்வேதத்திலிருந்து கொடுத்துள்ளேன். அதற்கான அனுவாகங்கள்: 12-14. ஸோமயாகத்தில் பவமானபதிகளை பற்றி இவர் சொல்லிய தேவர்களில் ஆர்பவபவமானம் என்ற ஸூக்தம் அனுவாகம் - 15ல் உள்ளது. மேற்கண்ட அனுவாகங்கள் 12- 15 வரையிலான மந்திரங்களுக்கு ரிஷி விஸ்வாமித்ரர் ஆவார். ஆர்பவ பிரைஷா என்ற அத்யாயமானது ஸோம யாகத்தில் சொல்லி அவிர்தரும் ருக்வேத யஜுஷ் மந்திரங்கள் அனுவாகம் 16ல் உள்ளது இரு வாமவேத ரிஷியால் சொல்லப்பட்டது. ருபுதேவனின் மகன் ஸூனு ரிஷியால் சொல்லப்பட்ட ஸூக்தம் எதிரிகளை வெல்ல விரையும் சக்தியை தரவேண்டி ஓதப்பட்டது. அனு: 17. மஹா ஐத்ரோய ரிஷி சொல்லியது ருபுதேவர்கள் தங்களுடைய தபோ வலிமையால் ஒரு பாத்திரத்தினை நான்காக வேள்வியின் பொழுது செய்தமையால் தேவத்தன்மையை அடைந்து மூன்றாம் நாள் ஸோம யாகத்தில் இடம்பெற்ற விளக்கத்தினையும், தேவப்பதவியை அடைந்ததால் இவர்களை தேவர்கள் தங்களுடைய மறைமொழிகளால் ருது என்றும் ஸவிதா என்றும் வேநர்கள் என்றும் அழைக்கப்பட்ட காரணங்களும் பிராமணத்தில் சொல்லப்பட்ட அனு: 18. அனுவாம் 19 ல் ஐந்தார்பவபவமானத்தில் அதாவது இந்திரனை பிரதானமாக வைத்து உபதேவர்களாக ருபுக்களை கொண்டு மூன்றாம் நாள் நடக்கும் வேள்வியில் உந்நியமானன் என்ற புரோஹிதர்கள் அனுவாகம் 8 லுள்ள ருபு ஸூக்தத்தினை ஓதி அவிர்பாகம் அளிப்பார்கள் அதற்கான நிரூபணங்கள். மேலும் ருபுதேவர்கள் பிரஜாபதியின் பதியை அடைந்தின் விவரம். இவர்கள் சந்தஸுக்களில் ஜகதீயின் அதிதேவர்களாக ஆனவிதம் இவைகள் அனைத்தும் பிராமணங்களாக சொல்லிப்பட்டுள்ளது. அனுவாகம் 20ல் வைஸ்வதேவ சாஸ்திரங்களில் ருபுதேவர்கள் அனைத்து யாகங்களில் இடம் பெற்றதற்கான பிராமணங்கள் மந்திரத்துடன் உள்ளது. மேற்கண்ட இவற்றினை மஹீத்ரேய ரிஷி, ஐத்ரேய ரிஷி, கௌஷீதகி ரிஷி மற்றும் சாங்காய ரிஷிகளால் சொல்லப்பட்ட பிராமணத்திலுள்ளது ஆகும். மேற்சொல்லப்பட்டவைகள் அத்யாயங்கள் 1 முதல் 4 வரையுள்ள அனுவாகங்கள் 1 முதல் 20 வரையுள்ளவைகள் ருக்வேதத்திலிருந்து கொடுக்கப்பட்டவைகள் ஆகும்.

அனுவாகம் 21ல் யஜுர்வேதத்தில் இடம்பெற்ற ருபுதேவ மந்திரங்கள் ஸூக்தமாக கொடுக்கப்பட்டுள்ளது, இவற்றினை ரிஷி வஸிஷ்டர் ரிஷி வாமதேவர் ரிஷி ஸ்வஸ்தி ஆகியவர்கள் சொல்லியது. அனு: 22 ல் ஆறு பருவங்களுக்கும் அதிதேவர்களாக விளங்கிடும் கடவுட்களை சொல்லி ஓதும் ருது ஸூக்தம் உள்ளது. இது ஆத்ரேய ரிஷியின் மகன் ஸ்வஸ்தி ரிஷியினால் சொல்லப்பட்டுள்ளது. இதில் தான் ருபுதேவர்கள் சரத்ருதுவிற்கு கடவுளாக சொல்லப்பட்டுள்ளார்கள். அதுமட்டுமின்றி 21வது ஸ்தோமத்திற்கு அதிகாரிகளாக அங்கிங்கரிக்கப்பட்டுள்ளார்கள். வைராஜம் என்ற ஸாமத்திற்கும் ஶ்ரீக்கும் அதிபுருஷனாக இந்திரனால் அனுகிரஹம் பெற்ற விவரம் ஸூக்தமாக சொல்லப்பட்டுள்ளது. அனுவாகம்: 23 இது ரிஷி பிசேதராங்கிரஸரால் சொல்லப்பட்டது. மூன்றாம் நாள் ஸோம யாகத்தில் அக்நீத்ரன் என்ற புரோஹிதர்கள் சொல்லும் ஸூக்தத்தில் மஹாகவிகளும் அம்ருத்தை அருந்தியவர்களுமான ருபுதேவர்களின் தந்தை ஸுந்வாங்கிரஸரை போற்றி அவி தரும் மந்திரம் ஸூக்தத்தில் சொல்லிப்பட்டுள்ளது. அனுவாகம் 24ல் யஜுர்வேதத்தில்

பிரஜாபதியாகியவர் சொல்லிய பஹுபவமானங்கள் அடங்கிய ஸவனபவமான ஸூக்தம் சொல்லப்பட்டுள்ளது. அனுவாகம் 25ல் ருபுதேவனின் மகனாகிய ஆத்ம ரிஷியால் சொல்லப்பட்ட அன்ன ஸூக்கதம் உள்ளது. இதற்கு புராணகாலத்தில் புராணகால ருபுக்களால் சொல்லப்பட்ட உபநிஷத் விளக்கம் தான் அன்னபூர்ணோபநிஷத் ஆகும். அனுவாகம் 26 ல் அக்னிசய மஹாயகத்தில் யாககுண்டத்திற்கான அதிதேவர்களுக்கு அவிதரும் மந்திரங்களில் ருபுதேவர்களுக்கு அவிர்பாகமான தரும் ஆஹுகுதிகளின் பெருமையை பிராமணங்கள் சொல்லியது. அனுவாகம் 27 ல் ஸோமயாகத்தில் பிரஜாபதியாகியவர் நாராணய ரிஷிக்கு சொல்லிய ஸவன பாவமாந ஸூக்தங்களைப் பற்றிய விளக்கங்கள் பிராமணமாக. அனு 28 ல் வைஸ்வதேவ சாஸ்திரத்தில் மூன்றாம் நாள் ஸோமயாகத்தில் ருபுதேவர்களை குறித்து தரப்படும் அவிக்கான வேத மந்திரங்கள் பிராமணத்துடன். அனு 29 ல் பித்ரு மேதம் என்ற முன்னோர்களுக்கான யாகத்தில் ருபுதேவர்கள் ஸவிதாவின் பதவியை அடைந்தார்கள் அதனால் ஸம்வத்ஸரத்தின் அதிபுருஷர்களாக விளங்கிய பிராமண ஆதாரங்கள். அனு 30 ல் ஸுதன்வாங்கிரஸ கோத்திரத்தில் வந்த லாக்யாயநி ருஷியின் மகன் புஜ்ஜு என்ற ருஷியின் பெருமையை யாஜ்ஞவல்கிய மஹரிஷி சொல்லிய பிராமண நிரூபணங்கள் உள்ளது. இதில் தான் அஸ்வமேத பிரியர்களாகிய ருபுக்கள் அஸ்வமேதத்திற்கான விளக்கத்தினை பதஞ்சலி ரிஷியின் புத்திரர் காப்ய ரிஷிக்கு அவர்மகளை கந்தர்வனுக்கு திருமணம் செய்யும் போது அனைவர்களுக்கும் ஸபையில் சொல்லிய விதம் இருக்கின்றது. ரதகார பிராமணர்களாகிய ருபுக்கள் தேவரதத்தின் பெருமைகளையும், புமியிலிருந்து உண்டாகிய வஸ்துகளையும் பஞ்சபுதங்களாகிய ஆகாசங்களையும் சுட்டிக்கட்டி பஞ்சேந்திரயங்களுக்கு அதிகாரியாகிய இந்திரனையும், ஸுபர்ணர் மற்றும் வாயுக்கு மூலம் சொல்லியும், அதனால் வியுஷ்டியும் விருத்தியடைவதால் மிருத்துவை நாசம் செய்கின்றபடி அஸ்வமேதத்தின் பலன் இருப்பதாகையால் அனைவருக்கும் ஆயுள் விருத்தி ஆகின்றது என்று சொல்லிய வேதவாக்கியம் பிராமணமாக இடம்பெற்றுள்ளது. மேற்வரும் 26 முதல் 30 வரையிலான பிராமணங்களை யாஜ்ஞவல்கிய மஹரிஷியால் சொல்லப்பட்டது. யஜுர்வேதத்தினை சார்ந்த அத்யாயங்கள் 5 முதல் 6 வரையாகும்.

அனுவாகம் 31 ஆனது ஸாமவேதத்திலுள்ள ருபு ஸூக்தம். இதை ரிஷி ஆங்கிரஸ குடும்பத்தினை சார்ந்த சுருககக்ஷரும் மோதாதிதியும் சொல்லியது ஆகும். அனு 32 ல் ஸவனபவமான ஸூக்தம் உள்ளது. அனுவாகம் 33-34 இல் ஸௌமித்ரே த்வே மற்றும் பிராஜபதி வஷட்கார நிதனம் என்று அழைக்கக்கூடிய ஸாம கீதங்கள் உள்ளது. இவற்றினை கூறிய ரிஷிகள் ஸுமித்ரர் மற்றும் பிரஜாபதி ஆவார்கள். அனுவாகங்கள் 35ல் உள்ளவைகள் தளவாகர ரிஷியால் சொல்லப்பட்ட ஆர்பவ பவமானங்கள் உள்ளது. அனு -36 இல் தாண்டீய மஹரிஷியால் சொல்லப்பட்ட ஆர்பவபவமான பிராமணமும் அதன் மந்திரமும் உள்ளது. அனுவாகம் 37 - 40 வரை தளவாகர ரிஷி சொல்லிய ஆர்பவ பவமானங்களைப் பற்றிய பிராமணங்களும் மந்திரங்களும் விளக்கமாக உள்ளது. மேற்சொல்லப்பட்டவைகள் அத்யாயம் 7 மற்றும் 8 இல் உள்ளவைகள் ஸாமவேதத்தினை சார்ந்தது ஆகும்.

அனுவாகம் 41 இல் அதர்வாங்கிரஸ வேதத்திலுள்ள ருபு மந்திரங்கள் ஆகும். இவற்றினை முறையே ரிஷி அதர்வணர் மற்றும் விஸ்வாமித்ரர் கூறியதாகும். அனு-42 ல் வரும் ஸவந பவமான ஸூக்தமானது ஸோம யாகத்தில் அக்நீத்ரி புரோஹிதர் ஓதுவார். இவற்றினை ஆங்கிரஸரின் மகனாகிய பிரசேத ரிஷியும் மற்றும் வைஸ்வத ரிஷியின் மகனாகிய யமனால் சொல்லப்பட்டுள்ளது. அனுவாகம் 43ம் இவர்களால் சொல்லப்பட்டதே ஆகும். அனு-44 ஆனது ஸுதன்வாங்கிரஸ ரிஷியின் மகனாகிய ருபுவால் சொல்லப்பட்டது ரோஹிணீ ஸூக்தம். இது எலும்புமுறிவு அறுவை

சிகிச்சைக்காக மூலிகைகளைக் கொண்டு செய்யப்படும் வைத்தியத்திற்காக ருபுதேவனால் சொல்லப்பட்டது ஆகும். அனுவாகம் 45 ஆனது த்வஷ்டா என்ற பிரஜாபதியால் வேதத்தில் முதன்முதலாகச் சொல்பட்ட மதுவித்யா என்ற மந்திர உபதேசத்தினால் அக்னியும், இந்திரனும் மற்றும் ருபுதேவனும் ஸோம யாகத்தில் முதன்மையாக இடம்பெற்ற விவரத்துடன் கூடியது. இதை கூறியவர் அதர்வாங்கிரஸ மஹரிஷிகள் ஆவார்கள். அனுவாகம் 46 ல் ஐந்திரார்பவ பவமானங்கள் ஆகும். இவற்றில் தான் ருபுதேவர்கள் அனைத்து தேவர்களின் வடித்திலுள்ளார்கள் என்பதை கூறிகின்றார்கள் கோபத ரிஷியும் மற்றும் மஹீத்ரேய ரிஷியும். ஸோமயாகத்தில் ருபுகளின் அவிர்பாகத்தில் சொல்ல வேண்டிய மந்திரங்களை ஹோதா, மித்ராவருணா, பிரம்மணசம்ஸி, போதா, நேஷ்டா, அச்சாவாகன், அக்நீத்ரி முதலிய புரோஹிதர்களால் சொல்லத்தக்கது ஆகும். இவ்வேத மந்திரங்கள் அனைத்தும் ஜகதீ சந்தஸில் வருவது ஆகும். இக்கர்மாவிற்கு மூன்றாவது ஸவனம் என்று வேதத்தில் பெயர் ஆகும். இது ருக்வேதத்திலிருந்து வந்தது ஆகும். அனு 47 ஆனது ஆர்பவ பவமான மந்திரத்தின் விளக்கம் ஆகும். இதன் தேவன் ருபுக்கள் ஆவார்கள். இவர்கள் முறையே ஸூர்ய மற்றும் சந்திர லோகத்தின் அதிகாரிகளாக முறைபடுத்தி சொல்லப்பட்டுள்ளார்கள். இதனால் ஸ்வரன் என்றும் கயன் என்றும் மந்திரங்களில் துதிக்கப்படுகிள்றார்கள். மேற்சொன்னவைகள் அனைத்தும் அதர்வணவேதத்தின் பாகங்கள் ஆகும்.

அனுவாகம் 48 இல் உள்ளது பிரஜாபதி ரிஷி மற்றும் ஸாத்திய கணங்களால் சொல்லப்பட்டது. இது ருபுதேவர்களின் அவிர்பாகத்தினைப்பற்றிய அக்நிசயன யாகத்தில் வரும் மந்திரம் ஆகும். 49 - ஆனது பிரவர்க்ய யாகத்தில் வரும் மந்திரமான இதை தீர்க்கதமஸ் ரிஷி சொல்லியது. இறுதியாக 50 வது அனுவாகத்தில் உள்ள பிராமணமானது ஸ்ரீ ராஜஸூய யாகத்தில் ஸ்ரீ விஷ்ணுவின் அவிர்பாகமாகிய மூன்று கபால ஸோமத்தினை தக்ஷர்களாகிய ரதகார்களாகிய ருபு குலத்தினர்களுக்கு தரவேண்டிய வேத விதி ஆகும். மேலும் அஸ்வமேதத்தில் பிராமணர்கள் யாகத்தின் முடிவு வரை யாகப்பிரியர்களாகிய ரதகார பிராமணர்கள் வீட்டில் குதிரை கட்டிவைத்து பூஜிக்க வேண்டிய விதி வேதத்தில் பிராமணமாக யாஜ்ஞவல்கிய மஹரிஷியால் சொல்லப்பட்டுள்ளது. மேற்சொன்னவைகள் யஜுர்வேதத்திலுள்ள வேத பாகங்கள் ஆகும். முதலாவது அத்யாயம் முதல் 10 வது அத்யாயங்கள் வரையுள்ளவைகள் வேதங்கள் ஆகும்.

அத்யாயம் 11ல் அனுவாகம் 51 முதல் 54 வரையுள்ளவைகள் வேதத்திற்கான கல்ப ஸூத்திரங்கள் ஆகும். இப்புத்தகத்தில் கொடுக்கப்பட்ட தேவநாகரிகளுக்கான சிறுவிளக்கங்கள். **ருக்வேத்தில் கல்பத்தில் ரிஷிகள் சொல்லியவைகள்:** ஸோமயாகத்திற்கான தேவர்களை சொல்லுமிடத்து அக்னி, வஸு முதல் ஸவனத்திற்கும் இந்திரன், ருத்திரன், விஸ்வகர்மா இரண்டாவது ஸவனத்திற்கும் ஆதித்யன், **ருபு, வாஜன், விப்வான்,** ஸவிதா, விஸ்வதேவர்கள், பிருஹஸ்பதி ஆகியோர்கள் மூன்றாவது ஸவனத்திற்கும் தேவர்கள் ஆவார்கள். மேலும் ஸவந பவமானங்களுக்கான ஸூக்தங்களும் அதில் அத்தேவர்களும் சொல்லப்பட்டுள்ளார்கள். பாவமானங்களை தருவற்கான வேதமந்திரங்களும் சொல்லப்பட்டுள்ளது. ஆர்பவ பவமானத்தின் போது புரோஹிதர்கள் சொல்ல வேண்டிய ருக்வேத மந்திரங்கள் முறையாக புரோஹிதர்களுக்கு சொல்லப்பட்டுள்ளது. மேலும் வேளாண் தொழில் தொடங்குவதற்கு ருபுக்களால் சிருஷ்டிக்கப்பட்ட உழவுகருவிகளையும், உழவுமண்ணையும் மற்றும் அதற்கு அதிதேவனாக விளங்கிடும் இந்திரன், ருபுதேவர்கள், க்ஷேத்திரபதி, ஸீதா மற்றும் சுனசீரங்கள் அகியோர்களை போற்றி பூஜிக்கும் வேதமந்திரங்கள் சொல்லப்பட்டுள்ளது.

**யஜுர்வேதத்தில் கல்பத்தில் ரிஷிகள் சொல்லியது:** இரதகாரர்களுக்கு அக்னி ஆதானம் என்ற கர்மாவை வர்ஷருதுவில் செய்ய வேண்டும் என்றும் சொல்லப்பட்டுள்ளது. இவர்களுக்கு தேவன் ருபுக்கள் ஆவார்கள். இவர்களுக்குண்டான விரத்தின் கடவுளும் ருபுதேவர்களே ஆவார்கள். இவற்றினை பிரமாண்டபுராணமும் சொல்லுகின்றது. श्रीब्रह्माण्डमहापुराणे वायु प्रोक्ते मध्यभागे तृतीय उपोद्घातपादे ऋषिसर्गवर्णनं अध्यायं १ श्लोकं १०७ ॥ रथकाराः स्मृता देवा ऋभवो ये परिश्रुताः॥ १०७ ॥ ரதகார பிராமணர்களுடைய ஸவித்திரீ வித்யா உபதேசத்தில் பயன்படுத்த வேண்டிய சந்தஸ் காயத்திரீ, அதில் வரும் மந்திரம் தத் ஸவிதுர்வரேண்யம் என்று தொடங்கக்கூடிய ருக் ஆகும். இதன் ரிஷி விஸ்வாமித்ரர். மேலும் ஆதித்யர்களின் எட்டுவகையான உருவங்களில் ருபுதேவன் 7 வது வடிவம் ஆகும். மேற்கு திசையில் ருபுதேவனுக்கான ஹவிர்பாகம் அக்னிசயத்தில் சொல்லப்பட்டுள்ளது. பிராமணர்கள் வஸந்தத்திலும், கிர்மருதுவில் ராஜாக்களும், சரத்ருதுவில் வைஸ்யர்களும் மற்றும் ரதகாரர்கள் வர்ஷருதுவிலும் அக்னியை கொண்டு யாகங்கள் செய்வது சிறப்பு ஆகும். இருந்தாலும் அனைவர்களும் வஸந்த ருதுவில் அக்நியை கொண்டு யாகம் செய்யலாம். இதுமட்டுமின்றி ரோஹிணி நக்ஷத்திரத்திலும், கிருத்திகையிலும், புனர்வஸுவிலும், பூரம் மற்றும் உத்திரத்திலும், சிறப்புமிக்க சித்திரை நக்ஷத்திரத்திலும் அக்னியை கொண்டு அனைவரும் யாகங்கள் செய்வது சிறப்பாகும். ஸோமயாகத்தில் 17 வது ஸ்தோமமாக ருபுதேவர்களுக்கான அவிர்பாகம் வருகின்றது. அக்நிஷ்டோம யாகத்தில் மூன்றாவது தினத்தில் ஜகதீ சந்தஸில் ருபுதேவர்களின் மந்திரங்களை சொல்லி யாகம் செய்யப்படுகின்றது. **"ஆயுஷே ஹிம் குரு தஸ்மை ப்ரஸ்துஹி தஸ்மை ஸ்துஹி தஸ்மை மே அவருத்3த்4யா, ஸகும் வேசாயோபவேசாய ஜகத்3யயாபி4 ப4வே ச2ந்த3ஸே ஸ்வாஹா"** என்ற ருபுதேவனின் மந்திரங்களை சொல்லியவாறு யாகம் செய்யபடுகின்றது. மேலும் சிறப்பாக அனைத்து ரிஷிகளினாலும் தேவகணங்களை சார்ந்தவர்கள் எண்ணிக்கை சொல்லப்படுகின்றது. இதில் **1) பிரம்மா 2) பிரஜாபதி 3) பிருஹஸ்பதி** 4) அக்நி 5) வாயு 6) ஸூர்யன் 7) சந்திரன் 8) நக்ஷத்திரங்கள் 9) ருதுக்கள் 10) ஸம்வத்ஸரங்கள் 11) இந்திரன் 12) ஸோமன் 13) யமன் 14) வருணன் 15) குபேரன் 16) வஸுக்கள் 17) ருத்திரர்கள் 18) ஆதித்யர்கள் 19) விஸ்வதேவர்கள் 20) ஸாத்யகணங்கள் 21) மருத்வான்கள் **22) ருபுக்கள் 23) பிருகுக்கள் 24) ஆங்கிரஸர்கள்** முதலியர்கள் மட்டும் தான் தேவகணங்களாக சொல்லப்படுகின்றார்கள். இக்கணங்களில் **1,2,3,22,23,24** ஆகிய கணங்களின் பிரிவுகள் தற்போதுள்ள விஸ்வகர்ம பிராமணர்களை தான் குறிக்கும். இதற்கான வேத ஆதாரங்களை தான் என்னால் தொகுத்து வெளியிடப்பட்ட **"சதுர்வேதீய விஸ்வகர்ம ஸம்ஹிதையில்"** பிரம்மாதி கணங்களின் பிறப்புகளைப் பற்றிய வேத ஆதாரங்களை கொடுத்துள்ளேன். பிரம்மத்திலுண்டான ஸாகனாதி ரிஷிகளின் வழிவருபவர்கள் பிரம்ம கணங்கள் ஆவார்கள். விஸ்வகர்மா, மனு, த்வஷ்டா, சில்பகாஸ்யர் மற்றும் தக்ஷ பிரஜாபதிகளின் வழிவருபவர்கள் பிரஜாபதி கணங்கள் ஆவார்கள். ஸுதன்வநதேவனின் புத்திர்கள் ருபு, வாஜன், விப்வான் முதலியர்கள் வழிதோன்றியவர்கள் ருபுகணங்கள். சியாவனர், வேனர், விஸ்வரூபர், அபூதி மற்றும் கிருத்சமதர், சுக்கிரன் ஆகிய பார்க்கவ வழிதோன்றியவர்கள் பிருகுகணங்கள் ஆவார்கள். பிருஹஸ்பதி, சாந்தி, கோர, விரூபர், ஸம்வர்தன், ஸுதன்வநன், உசத்யன், காண்வன், குத்ஸன் முதலிய வேதத்தில் சொல்லப்பட்ட ஆங்கிரஸர்களின் வழிவருபவர்கள் ஆங்கிரோகணங்கள் ஆவார்கள். தலைச்சிறந்த ஏழு கவிகளில் ருபுதேவனின் புத்திரன் ஸூனு ரிஷி என்பவர் சொல்லப்படுகின்றார்.

மேற்சொல்லப்பட்ட சிறந்த சிருஷ்டி கர்தாக்களின் வம்சத்தினர்களே ருக்வேதத்தில் மஹா குலத்திலுண்டான பிராமணர்கள் என்று அழைக்கப்படுகின்றார்கள்.

**ஸாமவேதத்தில் கல்பத்தில் ரிஷியகள் சொல்லியது:** ஆதித்ய கிரஹம் என்ற ஸோம யாக பாகத்தில் கலயங்களை நன்முறையில் செய்யதற்கான அவி ருபுதேவர்களுக்கு அளிக்கப்படுகின்றது. ஆர்பவர்களுக்கு அனுஷ்டுப் சந்தஸும் சொல்லப்பட்டுள்ளது. இவர்களுக்கு ஐடம் என்ற ஸாமம் சிறப்பாக ஓதப்பட்டுள்ளது. ஆர்பவ பவமானத்தில் புரோஹிதர்கள் தெற்குபுறம் அமர்ந்தவராக இருந்து ஔதும்பரீ மரபாத்திரம் கொண்டு கிருஷ்ணாஜிநம் அணிந்தவராக வலதுபக்க முன்குடும்மி வைத்தவராக அமர்ந்து ருபுவேதவனுக்கான அவிர்பாகத்தினை வேள்வியின் போது தரவேண்டும். அப்போது புரோஹிதர் ஸ்வரோஸி கயோஸி என்ற ருபுதேவர்களின் மந்திரனை சொல்ல வேண்டும். லௌசமந்தி ஸாமத்தினை ஆர்பவ பவமானத்தின் போது சொல்லுவது விஷேசம் ஆகும். ஆபர்வர்களின் ஸ்தோமங்கள் 16, 17, 21 மற்றும் 33 என்றவாறு சொல்லப்படுகின்றது. இதற்கான வேத மந்திரங்களை தளவாகர ரிஷியானவர் பிரசித்தியாக சொல்லியிருக்கின்றார். மேலும் வேதத்தில் இவர்களுக்கு வைராஜம், காயத்திரம், பிருஹத்ரதந்தரம் முதலிய ஸாமகீதங்களும் சொல்லப்பட்டுள்ளது.

**அதர்வணவேதத்தில் கல்பத்தில் ரிஷிகள் சொல்லியது:** பர்ணமணியின் பெருமையை சொல்லுமிடத்து ரதகாரர்களை விஷேசித்து தீவாந் என்று அதர்வண ரிஷி சொல்லியுள்ளார். மேலும் மூன்றுவேதங்களிலும் சொன்னதைப்போல் இங்கேயும் ஆர்பவ பவமானத்தில் ஸவனதேவதா ஸூக்தம், ஸவனபவமான ஸூக்தம் மற்றும் மதுவித்யா ஸூக்தத்திலுள்ள வேதமந்திரங்களை கொண்டு அவிர்பாகம் தரப்படுகின்றது. வேதத்தில் யாஸ்க ரிஷியினால் சொல்லப்பட்ட ருபுதேவர்களை பற்றி விளக்கம் நிருக்கதமாக கொடுக்கப்பட்டுள்ளது அனுவாகம் 55 இல். இதில் இவர்கள் ருபுக்கள் என்றும் ருதுக்கள் என்றும் அழைக்கபடுகின்றார்கள். சிருஷ்டி தொழிலாலும் மேதா ஞானத்தினாலும் ஸுதன்வந புத்திரர்கள் தேவர்களாகினார்கள். தேவ இனமாகிய இவர்கள் ஒராண்டுக்கான வளத்தினை (கிருஷீ வித்தையை) தங்களுடைய தபோ வலிமையால் அறிந்து, சிருஷ்டியை கொண்டு உண்டுபன்னினார்கள். ருபுவும் விப்வனும் வாஜனும் ஸுதன்வந ஆங்கிரஸர்களின் மூன்று மகன்கள் ஆவார்கள். இவர்கள் மூவரும் முதல்வானாகிய ருபுவின் பெயராலே அழைக்கப்படுகின்றார்கள். இந்த ருபுதேவர்கள் யாகத்திற்கான மரப்பாத்திரத்தினை ஒன்றாக இருந்ததை நான்காகச் செய்தளித்ததால் ஸோமயாகத்தில் இடம்பெற்றார்கள். இதனால் 10 மேற்பட்ட ஸூக்தங்களில் இடம்பெற்றார்கள். மேலும் இவர்கள் ஆதித்யனின் ரச்மிகளாக அதாவது ஒளிக்கதிர்களாகவும் சொல்லப்படுகின்றார்கள். இவர்கள் ஆதித்யனின் அம்சம் உடையவர்களாக போற்றப்படுகின்றார்கள். இத்துடன் அத்யாயம் 11 முற்றும். இவற்றில் உள்ளவைகள் வேதத்தின் பிரயோக மந்திரங்களை கொண்டு விளக்கி சொல்லும் ஸ்மிருதிகள் ஆகும். **அனுவாகம் 56 முதல் 59 வரையுள்ளது** நான்கு வேதத்திலுள்ள ஸ்ரீ மேதா தேவீயின் ஸூக்தங்கள் ஆகும். அனு 60 லுள்ளது கேசினீ ஸூக்தமாகும். அனுவாகம் 61 முதல் 63 வரையுள்ளது வேள்ளாண்மைக்கு சொல்ல உதவும் ஸீதா ஸூக்தங்கள் ஆகும். அனுவாகம் 64 ல் உள்ளது தேவரத ஸூக்தம் ஆகும். இது ரதத்தினை வெள்ளோட்டம் விடுவதற்காகவும் ரதத்தினை பூஜிக்கவும் ரதகார பிராமணர்களுக்காக தொகுக்கப்ட்டது. அடுத்தது 65 ல் ருபுதேவனைப்பற்றிய வேத மந்திரங்கள் ஆகும். மேற்தொகுக்கப்பட்டவைகள் அத்யாயம் 12 முதல் 13 வரையுள்ளது வேதங்கள் ஆகும். அனுவாகங்கள் 66 முதல் 70 வரையுள்ளவைகள் இதிஹாஸ புராணங்களில் உள்ள ஸாதாரண கிரந்தங்களாகிய ஸ்லோகங்கள் ஆகும். இவற்றில் அஸுரேந்திரனாகிய பிரஹ்லாதன் ஸுதன்வாங்கிரஸ ரிஷியின்

பெருமையை சொல்லும் அஸுரேந்திர கீதங்கள் மஹாபாரதத்தில் ஸபாபர்வத்தில் 61வது அத்யாயத்திலும் மற்றும் உத்யோகபர்வத்தில் 35 வது அத்தியாயத்திலுமாக இரண்டுவுள்ளது. ஸ்ரீ ருபுதேவனால் சொல்லப்பட்ட ருபுகீதமாகியது மூன்றுள்ளது. முதலாவது ஸ்ரீ விஷ்ணுமஹா புராணத்தில் அம்சம் 2ல் அத்யாயம் 15 ல் உள்ளது. இரண்டாவது சிவரஹஸ்ய ருபுகீதமாக சிவரஹஸ்ய புராணத்திலும் மூன்றாவது ஞானவாஸிஷ்ட ருபுகீதமாக வாஸிஷ்ட புராணத்திலும் உள்ளது. இவைகள் முறையே பரபிரம்மா, விஷ்ணு மற்றும் ஈஸ்வரனின் உபதேசங்களை பற்றிய கீதமாகும். அடுத்து ஸ்ரீ அத்வைத மத பிரம்ம ஞானத்தினை உபதேசிக்கின்ற விதமானது ஆதாரமாக ஸ்ரீ விஷ்ணுமஹா புராணத்தில் அம்சம் 2 அத்யாயம் 16 லும் அக்னிபுராணத்தில் கடைசி கடைசி அத்யாயத்திற்கு முன் பகுதியிலுமாக இரண்டுள்ளது. மேற்சொன்ன கீதங்களும் அத்வைத வித்யாவையும் நிதாக முனிவருக்கு சொல்லியதாக எழுதப்பட்டுள்ளது. இதற்கு ஆதாரமாக மேலும் 108 உபநிஷத்துகளில் யாஜ்ஞவல்கிய ரிஷியின் உபநிஷத்தில் பரபிரம்மத்தை அறிந்த ரிஷிகளின் பெயர்களைக் குறிப்பிடுகையில் ருபுவையும் இவரது சிஷ்யர் நிதாக முனிவரையும் கூறிப்பிடுள்ளார். மேலும் புராணகாலத்தில் ருபுதேவனால் சொல்லப்பட்ட வராஹம், தேஜோபிந்து, (யஜுர்வேத பிரிவை சார்ந்தது) , அன்னபூர்ணா (அதர்வவேத பிரிவினை சார்ந்தது) மற்றும் மஹோபநிஷத்துக்களும் (ஸாமவேத பிரிவினை சார்ந்தது), மூன்று ருபுகீதங்களும், இரண்டு அஸுரேந்திர கீதங்களும், இரண்டு அத்வைத வித்யாவும் உள்ளது என்பது நாம் பெருமைப்பட கூடிய விஷயம் கூட. இவைகள் முறையே அத்யாயங்கள் 14 முதல் 18 வரையுள்ளவைகள் ஆகும். **அத்யாயம் 19 முதல் 20** வரையுள்ளவைகள் ருபுதேவ பிரதிஷ்டா விதியை சில்பவேதங்களிலுள்ள தேவபிரதிஷ்டா விதியையும், ருக்வேதத்தின் வைதீகமார்க்கமாக மந்திரங்களையும் கொடுத்துள்ளேன். அவற்றினை தமிழில் விளக்கத்துடன் கொடுத்துள்ளேன். ருபு ஸம்ஹிதாவிலுள்ள அத்யாயங்கள் மொத்தம் 20, அனுவாகங்கள் எண்ணிக்கை 100 ஆகும். இதில் பயன்படுத்திய மந்திரங்களின் எண்ணிக்கை மொத்தம்: 503, பிராமணங்களின் எண்ணிக்கை 57, கல்பங்களின் எண்ணிக்கை 37, ஸ்தாபத்யவேத, இதிஹாஸபுராண ஸ்லோகங்களின் எண்ணிக்கை 245ஆக இப்புஸ்தகத்திலுள்ள நிரூபணம் செய்யப்பட்ட மந்திர-பிராமண-கல்ப-ஸ்லோகங்கள் மொத்தம் 842 ஆகும். இப்புஸ்தகத்திலுள்ள வேத மந்திரங்கள் யஜுர்வேதத்தில் 4ல் 1பங்கு தொகையை உடையது ஆகும். இந்நூலினை என்னுடைய தாய்தந்தையர், குரு மற்றும் ஸ்ரீ விஸ்வகர்மாவின் அருளுடனும், ஸ்ரீ ருபுதேவனின் ஸ்ரீ அத்வைத வித்யாவை இப்பாரத்தில் பரப்பிய ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கராசார்யா, ஜகத்குரு ஸ்ரீ ஆதிசிவலிங்காசார்யா, ஜகத்குரு ஸ்ரீ கமலமூர்த்திஸ்வாமிகள், ஸ்ரீ பரசமய கேளரீநாத ஆதின ஸ்வாமிகள் ஆகியோர்களின் ஆனுகிரஹத்துடன் இந்நூலினை வெளியிடுகின்றேன்.

**இங்ஙினம் பிரம்மவம்ச பிராமணியத்திற்காக,**

ஆதிபிரம்ம குலோத்பவ: ஏகாருஷேய பிரவரான் வித:
ஸானக ரிஷி கோத்திர: ருக்வேத சாகத்யாயீ:
சில்பவேத சாஸ்திராந் வித: சாங்காயன ஸூத்திர:
ஸ்ரீ விஸ்வகர்ம பிரயோக நிபுணத்துவா
சதுர்வேதீய விஸ்வகர்ம ஸம்ஹிதாசார்யா
**பிரம்மஸ்ரீ சே. சுரேஷ் சர்மா M.B.A,**
12- குப்புதாசன் தெரு,
இராசிபுரம் - 637408,
நாமக்கல்- மாவட்டம்,
தமிழ்நாடு.

